ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

கிருஷ்ணமூர்த்தியால் சராசந்தன் சிசுபாலன்

வைகுந்தமடைந்த

# சராசந்த நாடகம்




ஞா - முனிசாமி முதலியார் பாரியாள்

அம்மணி அம்மாளிடம்

சகல சுதந்திரம் பெற்று,

சென்னை :

B. இரத்தின நாயகர் அண்ட் ஸன்ஸ்

அவர்களால் வெளியிடப்பட்டது.




[விலை ரூ

R. பலராமநம்பி

கடவுள் துணை

கிருஷ்ணமூர்த்தியால் சராசந்தன் சிசுபாலன்
வைகுந்தமடைந்த

# சராசந்த நாடகம்

## விநாயகர் துதி விருத்தம்

திருவருள்துவாரகேசன் திருவடிசிரமேற்கொண்டு
உருவளர்மிகுந்ததீரன் ஒளிசராசந்தராஜன்
மருவளர்சரித்திரத்தை வகுத்துநாடகமாய்ப்பாட
கருவளர்கைலைமேவும் கணபதிகாப்புதானே.

விநாயகர் வருகிற கவி

சீருள்ளகைலைநாதன் திரிசூலியீன்றபாலன்
வீருள்ளகணங்கள்சூழ வேதமா முனிவர்பாட
பேருள்ளபணிகள்மின்ன பெருச்சாளிமீதிலேரி
ஆருள்ள அகரம்சாலை ஐங்கரர்வருகின்றாரே.

விநாயகர் வருகிற தரு

சீலன்மகிழும்நேசன் சித்திரைவேல்பாகைவாசன்
செங்கழணிஐங்கரர்வந்தார் வேடிக்கையாக செங்கழ

மூலாதாரவிநோதன் மூஷிகம்தன்னிலேரி
வேலாயுதர்க்குமூத்தோன் வேதன்திவ்யபாரதன் சீல

திங்கள்முடியிலங்க செஞ்சடையுங்குலுங்க
மங்களசுபகர வல்லபைமணவாளன் சீல

வேதமுனிவர்பாட மெல்லியரெதிராட
நாதன்மூத்துக்கணேசன் நாகமுகந்துலங்க சீல

தண்டைகிண்கிணிகொஞ்ச தாளில்சதங்கைமின்ன
அண்டர்கள்பூமாரி கொண்டுசொரிந்துபோற்றசீல

## பொது வசனம்

அகோதெப்படியென்றால் விநாயகக்கடவுளை அர்ச்சனை செய்த மாத்திரத்தில் மகததேசத்தை பரிபாலனஞ் செய்யும் மகாராஜாவினுடைய வாசல் கார்த்துவரானின்ற கட்டியக் காரன் வருகிற விதங்காண்க.

## கட்டியக்காரன் வருகிற கவி

சித்திரப்பணிகள்பூண்டு சிகையில்முண்டாசுகட்டி
பக்தியாய்நாமம்சாற்றி பார்மன்னர் அதிசயிக்க
வெத்தியாய்மகததேசன் வேந்தனுர்கொலுசிங்காரி
கத்திகேடயமுந்தாங்கி கட்டியன்வருகின்றானே.

## கட்டியக்காரன் வருகிற தரு

சிகையில்பாகைதுலங்கியிலங்க சிரக்கநாமம்சாற்றியே
மகததேசராஜன்வாசல்கட்டியக் காரனும்வந்துமேவினான்
யீட்டியைப்போலேமீசைமுரிக்கி யிரண்டுகுண்டலம் ஜொலிக்கவே
மேட்டிமைப்பேசிபிரகுதிர்தி வேந்தன்களிக்கவேமேவினான்
தட்டிஜல்லடங்கச்சைவரிந்து தண்டைவண்டயம் கொஞ்சவே
அட்டியில்லாமல்அரசன்வாசல் கட்டியக்காரன்வந்து மேவினான்
கத்திகேடயம்கையிலிளங்க கட்டாரியுடன்வாளும்துலங்க
வெத்திவிருதுகூரிக்கட்டிய காரனும்வந்துமேவினானையா

## பொது வசனம்

இவ்விதமாக கட்டியக்காரன் சபை யலங்கரித்திருக்க மகததேசத்தை பரிபாலனம் செய்துவரானின்ற பிரகுர்த்தி மகாராஜனென்றும் மரகதராஜனென்றும் சொல்லாநின்ற மகாராஜன் சபைக்கு வருகிற விதங்காண்க.

## மரகதராஜன் வருகிற கவி

முடிமன்னர்படைநெருங்க மோகவஞ்சியர்களாட
படைமன்னர்க்கதிபனான பராக்கிரமமானதீரன்
நெடியமாமகுடமின்ன நீதிமந்திரிகள்சூழ
வடிவுடன்பிரகுர்த்தியராஜன் மகபதிவருகின்றாரே.

## மரகதராஜன் வருகிற தரு

உருக்கும்பொன்னிறமுள்ள பிரகுர்திமகா
ஒளிபதிகொலுவாகினர் சப்பிரமதாக" ஒளி
பெருக்கும்கரிபரிகள் வருகும்படைநெருங்க

சுரு பேரிகைபூரிகை — நாதமுழங்கிட
மீரிமுரசுதுத் தாரிவழுங்கிட உருக்கு
நவமணிமுடிமின்ன தவளக்குடைகள்துன்ன
ரஞ்சிதமாதராடவே வேடிக்கையாக ரஞ்சித
தவரில்லாமதிமந்திரி யெவருமதிசயிக்க

சுரு சந்தனபரிமள கந்தமிகுந்திட
விந்தையதாகவே குந்தகமில்லாமல் உருக்கு
அந்தணர்மறைபாட அரிவையரெதிராட
ஆலவட்டங்கள்வீசவே வெகுவேடிக்கையாக ஆல
செந்திருமணிமார்பன் வந்தமன்மதன்போலே

சுரு செங்கைச்சிலையுடன் கங்கணமாடவே
பொங்கமாய்மாதர்கள் மங்களம்பாடவே உருக்கு
மண்டலத்தோர்களஞ்ச கண்டாமணிகள்கொஞ்ச
வளரும்வாத்தியம்மிஞ்சவே வெகுவீரியதீரன் வளரு
குண்டலங்கள ஜொலிக்க கூரும்தவம்வலிக்க

சுரு கொட்டியபம்பையும் கட்டியங்கூற
தொட்டியதுரபதி கிட்டியேசேர உருக்கு

## மரகதராஜன் சொல் கவி

அந்தணர்வேதம்வாழ்க அரசர்தன்குலமும்வாழ்க
மந்திரமுனிவோர்செய்யும் மகாதபம்யென்றும்வாழ்க
செந்திருகடாக்ஷம்வாழ்க செங்கோலும்நீதிவாழ்க
எந்தனையாளுகின்ற யிறைவனேபாதம்போற்றி.

## மந்திரி சொல் விருத்தம்

ஜெகதலமெல்லாங்கீர்த்தி செழித்திடசெங்கோலேந்தி
தகதகன்றிலங்கும்செம்பொன் தார்முடிவேந்தர்வேந்தே
குகுதகோசலமருடர் கொண்டுகப்பணமளிக்கும்
மகதமன்னவனளித்த மைந்தனே பாதம்பேரற்றி.

### மரகதராஜன் சொல் கவி

அருமையாய்பதம்பணிந்த அழகுள்ளமந்திரிமாரே
திருவருளாலேயென்றும் செழித்துமேநீங்கள்வாழ்க
வருகிறேன்செல்வம்பெற்று மகததேசத்தையாள
ஒருகுறைமனதிலுண்டு உகந்துமேயுரைசெய்வேனே.

### மரகதராஜன் சொல் வசனம்

கேளுங்களப்பா மந்திரிமார்களே மகாசெல்வம் பெற்று இந்த மகததேசத்தை பரிபாலனம் செய்து வருகிறோம் ஆகிலும் என் மனதில் ஒரு குறைவுண்டு அதைச் சொல்லுகிறேன் கேளுங்கள் மந்திரிமார்களே.

### மரகதராஜன் சொல் தரு

மகதமன்னவனுக்கு மைந்தனுகவந்து மந்திரிமாரே
யிந்த ஜெகதலமதிக்கவேசீரும்செங்கோலும்பெற்றேன் மந்திரிமாரே
அஷ்டலக்ஷிமிதேவி அம்மன்கடாக்ஷத்தால் மந்திரிமாரே
இஷ்டபோகம்பெற்து யிருந்தும்பலனென்ன மந்திரிமாரே
திரண்டபடையும்யானை சேனைகளிருந்தென்ன மந்திரிமாரே
என்தேவிமார்கள் யிருவர்யிருந்தென்ன மந்திரிமாரே
ஆரையடித்துநானனியாயம் செய்தேனே மந்திரிமாரே
பிறர் தாரத்தையிச்சித்து தாழ்வென்னசெய்தேனே மந்திரிமாரே
என்னைப்போலநீங்கள் யிருந்தரசாளுவீர் மந்திரிமாரே
வன்னிமானேந்திய மகாதேவரை நாடி மந்திரிமாரே
சந்தானம்வேண்டியே தபஞ்செய்து அரனாலே மந்திரிமாரே
மைந்தன்வரம்பெற்றுமகிழ்வாய்நான்வாரேன் மந்திரிமாரே
இதற்கொருயோசனை யெடுத்துரைசெய்யுங்கள் மந்திரிமாரே
அதற்குத்தடையில்லை அப்படியேசெய்வேன் மந்திரிமாரே

### மந்திரிகள் சொல் கவி

தபம்செய்யவேண்டுமென்றால் சார்ந்துமேவனத்தில்மிக்க
ஜெபம்செய்யும்ரிஷிகளுக்கு சீஷனாய்த்தொழில்புரிந்து
உபதேசமவரால்பெற்று உதுதிகொண்டானைநோக்கி
சுபமதுதபமேசெய்ய சுந்திரா அறிந்திடீரே.

மந்திரிகள் சொல் வசனம்

கேளும் மகாராஜனே தாங்களப்படி தபம் செய்ய வேண்டி யிருந்தால் ஆரண்யத்திலே வசித்திருக்கும் சிறந்த ரிஷிகளிடத்தில் அண்டி பணிவிடை செய்து வந்தால் அவர் அனுக்கிரக உபதேசம் பெற்றதைக் கொண்டு பரமசிவனை நோக்கி தபம் செய்தால் அவரது அனுக்கிரகம் கிடைத்து நன்மை யடையலாம் மகாரராஜனே.

மரகதராஜன் சொல் கவி

இதுவிதங்கண்டுறைத்த யென்மந்திரிமகிழ்வுகொண்டே
அதுவிதம்போல்நடக்க ஆரண்யம்போகவேண்டும் [ன்
மதுரகற்பினியும்ரூபவல்லி பொற்பினியாள் தன்னை
சதுர்பெருங்கன்னிமாரை ஜடுதியிலழைத்துவாரீர்.

மரகதராஜன் சொல் வசனம்

கேளுங்கள் மந்திரிமார்களே நீங்கள் சொன்ன பிரகாரம் தபம் செய்யத் துணிந்தேன் இப்பவும் என் தேவிமாரிடத்தில் விடை பெற்றுக்கொண்டு போக வேண்டும் அரண்மனை சென்று கற்பினி பொற்பினி யென்னும் தேவிமார்களை அழைத்துவாரும் மந்திரிமார்களே.

பொது வசனம்

அப்போது கற்பினி பொற்பினி இருவரும் சபைக்கு வருகிற விதங்காண்க.

கற்பினி பொற்பினி வருகிற கவி

பலபலமணிகள்மின்ன பாங்கிமார்கவரிவீச
மதிநிகர்சரிகைசேலை வாடையும்பரிமளிக்க
அலர்முகத்தழகுகொஞ்ச அருமைபொற்பினியுங்கூட
கலகலென்றசையத்தண்டை கற்பினிவருகின்றாளே,

கற்பினி பொற்பினி வருகிற தரு

காசினியோர்களிக்க மாசில்லாதபொற்பினி
கற்பினி மாதுவந்தாள்கலகலென்றுமே பலபணி
துன்னவே கற்
வீசியமணிமுடி வேந்தன்சபையைநாடி

சுரு வித்தகியருளிய உத்தமியாகிய
பக்தியாய்மன்னன் சித்தமேகாண காசினி

மின்னும்சரிகைசேலை பொன்னும்பளபளென்ன
வேடிக்கையாகநடந்தால் நல்ல மன்னியமாமுடி மன்னர் புகழ்ந்திட
மன்னும்ரதிசிங்காரி மணிவதன வொய்யாரி

சுரு வாலைக்குயிலென சோலைக்கிளிமொழி
காலைக்கதிர்குண சாலிவசீகரி காசினி

சுட்டிப்பிறைகள்மின்ன மெட்டிப்பளபளென்ன
துடியிடைமாதர்சூழவே நல்ல சுந்தரபரிமள கந்தமிகுத்திட
கட்டியசேலையும் ஒட்டியாணமிலங்கிட

சுரு கங்கணகடகமும் பங்கியமாமணி
செங்கதிரென்னவே மங்களரூபி காசினி

தண்டைகொலுசுபாட கொண்டைகுப்பிகளாட
சரசசல்லாபிவந்தாள் காரணிமெச்சியவாரணிபொற்பதம்
கெண்டைவிழிவிலங்க கண்டசரங்குலுங்க

சுரு கின்னரிவீணையும் பன்னியராகமும்
கன்னியர்பாடவே உன்னிதமாக காசினி

கற்பினி பொற்பினி சொல் தரு

சருணம்நாதா சருணம்நாதா சருணமுந்தன் தாளிணைக்கு
கருணைசெய்து ஆளுகின்ற கந்தமிகும்சுந்தரனே சரு
ஜெகதலத்தில்கீர்த்திசொல்லும் செங்கோலாளும் பிராணநாதா
மகததேசமாளுமன்னு மலரடிக்கியான்சருணம் சரு
நீதிமன்னர் மன்னரெல்லாம் நேசமாகவந்துசூழ
சோதிமாமகுடம்பெற்ற சுந்தரனேவித்தையாளா சரு
மங்களசபையைநாடி மனமகிழ்ச்சியாகயிப்போ
யெங்களை யழைத்ததென்ன யினையடிக்குவந்தனமே சரு

கற்பினி பொற்பினி சொல் வசனம்

சருணம் பிராணநாதா யெங்களை யழைத்த காரணம் யின்னதென்று தெரிவிக்க வேண்டும் பிராணநாதா.

மரகதராஜன் சொல் விருத்தம்

பன்னியேவாழிபொற்புக் கற்பினிமாதேவாழி
எண்ணியநிதமுரைப்பேன் யிளந்தையில்லாமல்நானும்

குண்ணியேயிருந்தோமிப்போ குறித்தனன்தபமேசெய்ய
நண்ணியேயெந்தனுக்கு நல்லவாக்குதருகுவீரே.

மரகதராஜன் சொல் வசனம்

அகோகேளும் யெனது தேவிமார்களே நீங்கள் யென்றும் மகாராஜியாக வாழக்கடவது உங்களை அழைப்பித்த காரியம் ஏதென்ருல் நமக்கு இதுவரையில் புத்திரசந்தான மில்லாமல் யிருந்ததினுல் நான் மகாதேவரை நோக்கி தபம் புரிய எண்ணங் கொண்டிருக்கிறேன் சந்தோஷமாக நல்ல வாக்குத் தரவேண்டும் பிராணவதிகளே.

கற்பினிபொற்பினி சொல் தர்க்கம் தரு

போகலாமோ அரசே தபத்துக்கு
போகலாமோஅரசே
நாகரீகமாக நாமிதுகாலமாக
நாடிச்சுதனுசையால்கோடிதபம் செய்தோமே போக

மரகதராஜன் சொல் தரு

என்னபாவம்செய்தோமோ பெரியோரை
சின்னமாகவைதேனோ
மின்னுமைந்தராசையை விடுப்பிரியாமல்
மெய்யழகியேதபம் செய்யயெண்ணங்கொண்டேன் என்ன

கற்பினிபொற்பினி சொல் தரு

வந்தவிதியிருக்க தெய்வந்தன்னை
நொந்திடவேபெருக்க
தந்திடுமோசெல்வம் தபம்செய்யஅதனலே
தரும்பலன்சதமென்று வரும்பலனறியேனே வந்த

மரகதராஜன் சொல் தரு

பிள்ளைகலிதீர தபம்செய்து
உள்ளங்களிகூர
வள்ளைநான்கண்டு வரம்பெற்றுவந்திட
வாக்குத்தரவேண்டும் பாக்கியவதிகளேபிள்ளை

### கற்பினி பொற்பினி சொல் கவி

அரனருள் பெறவேவேண்டி அன்பான பிராணநாதா
இறைவனே சுதனில்லாமல் யிதுகாலம் கழித்துவிட்டோ
பரமனைக் காண்பதெப்போ பாலனைப்பெருவதெப்போ [ம்
கரமுட னிருந்துவந்த காலத்தைக்கழிக்கலாமே.

### கற்பினி பொற்பினி சொல் வசனம்

கேளும் பிராணநாயகா நாம் முன் ஜென்மத்தில் என்ன பாவம் செய்தோமோ நமக்கு புத்திரசந்தான மில்லாமல் இதுகாலம் வரையில் கழித்து விட்டோம் இனி பரமசிவத்தைக் குறித்து தபம் செய்வது எந்தக்காலம் அவர் அனுக்கிரகத்தால் நாம் மைந்தனைப்பெறுவது எந்தக்காலம் அதிலும் எப்போதும்போலே யிருந்து காலம் கழிக்கலாம் எனது பிராணநாயகரே.

### மரகதன் சொல் தர்க்கத்தரு

அன்னமே தேனே அருங்கிளிமானே
அகமது களிப்பாக விடைதாரும்
சொன்னே னுனுக்கு சுதனில்லாதவர்க்கு
சொர்க்கமில்லையென்பதை அறியாயோ அ

### கற்பினி சொல் தரு

மணிமுடிவதனு மகத்தவன் சுதனு
மாருதபாபம் செய்து பிறந்தோமே
அரன்வரம்பெறவே அருஞ்சுதன்வரவே
அதுவெந்த காலமோ புரியேனே மணி

### மரகதன் சொல் தரு

வதனசிங்காரி மாதுவொய்யாரி
வந்துபிறந்தவிதி தவருது
சுதனரசாள துயர்மனமீள
துணிந்தேன் தபம்புரிய விடைதாரும்

### பொற்பினி சொல் தரு

அந்தரபூமி அருள்சிவகாமி
அம்மன் பாதமேநாடி தபம்செய்ய

உந்தனை நீங்கி உகந்தவரேங்கி
உருக்கத்தலைவிதியோ யென்னசெய்வோம் அந்

மரகதன் சொல் கவி

கூசவும்வேண்டாம்நீங்கள் குவலயமாள்வதற்கு
ஈசனைநோக்கிநானும் இதுகாலம்தவம்புரிந்து
பாசமாம்நமக்குபுத்ர பாக்கியமேபெற்றுவாரேன்
வாசமாய்பதியிலன்பாய் மகிழ்ச்சியாயிருந்திடீரே.

மரகதன் சொல் வசனம்

கேளும் எனது தேவிமார்களே நீங்கள் மனவருத்தப் படவேண்டாம் நான் பரமசிவனை நோக்கித் தவம்புரிந்து இந்த உலகத்தை யாளும்படி புத்திரபாக்கியம் பெற்று வருகிறேன் நீங்கள் அரண்மனைக்கேகி சந்தோஷமா யிருங்கள் எனது தேவிமார்களே.

கற்பினி சொல் வசனம்

அப்படியே உமது இஷ்டப்பிரகாரம் நிறைவேறக் கடவது போய் வாரும் எனது பிராணநாயகா.

பொது கவி

சகலருமதிசயிக்க சடைமுடியலங்கரித்து
புகலமுப்புரினூலாட பூங்காவிவேஷ்டிபூண்டு
தகதகென்றொளிரவெண்ணீர் தபமுனிவேஷங்கொண்டு
மகதமன்னவன்மகிழ்ந்து வனத்திற்குவருகின்றானே.

பொது வசனம்

அகோதெப்படியென்றால் மரகதராஜன் தனது மனைவிகளை அரண்மனைக்கனுப்பி புத்திரவாஞ்சையால் தபமுனி வேஷம் பூண்டு வனத்திற்கு வருகிறவிதங் காண்க.

மரகதராஜன் தபத்துக்கு வருகிற தரு

தபம்செய்ய நடந்தானே மரகதமன்னன்
தபமுனி வேடங்கொண்டுமே
தபம்செய்ய நடந்தானே தந்துமந்திரிக்குப்பட்டம் சுரு
சண்டகௌசிகரை கண்டுமே அருள்பெற
குண்டலமசையவே மண்டலம் துதிபெற தபம்

காவிகாம்பரம் சிறக்க திருமெய்யினிலணிந்திடும்
வெய்யவன்போலே மேவும்தூளிதம்திறக்க
நாவில்பஞ்சாக்ஷரம் நாலுவேதமந்திரமோதி சுரு

நம்பியே சிவனடி உம்பரும் புகழ்ந்திட
அம்புவிமன்னரும் இம்பமாய்மகிழ்ந்திட தபம்

கண்டிகைமார்பிலாடவே நல்ல அரமணிபிஞ்சியே
பெருகியகாலணி மண்டிகீதங்கள்பாடவே
வெண்டிரை சூழ்புவி வேந்தர்கள் வணங்கிட சுரு

வித்தகனருள்வரம் பெற்றிடக்கோரி
புத்திரவாஞ்சையை மெத்தவுங்கோரி தபம்

புலித்தோலாசனம்சாத்தி நல்ல பொன்னிறமேவிய
உன்னதமாக மெலித்தகலையும்போற்றி
ஜொலித்திடும்நவமணி சோதிப்பணிகளாட சுரு

சுந்தரமானகர் விந்தையாய்கடந்துமே
வந்திடகானகம் மந்திரமோதி தபம்

மரகதராஜன் சொல் கவி

பெருந்திருவருளேபோற்றி பிள்ளையுமெனக்கில்லாமல்
வருந்தியேநகரைவிட்டு வந்தேனுன்தபமும்செய்ய
அருந்தவரிஷியாசீர்மம் அவ்விடம்களிக்கக்கண்டு
தெரிந்திடக்கிருபைசெய்யும் தேவனேபாதம்போற்றி.

மரகதராஜன் சொல் வசனம்

அரகர மகாதேவா எனக்கொரு மைந்தனில்லாமல் என் நகரை விட்டு கானகம் நாடி தவக்கோலங் கொண்டு வந்தேன். ஆதலால் என் கண்முன்னே ரிஷியினுடைய ஆசீர்மங் காணும்படி கிருபை வைத்தருள வேண்டும் கர்த்தனே.

மரகதராஜன் சொல் தரு

வந்தேனகரைவிட்டு இங்கே
மண்ணுசைபெண்ணுசை தன்னைவிட்டு
சந்தேகமதுநீங்கி அருள்பெற
தபமுனி யாசீர்மம் காண்பதெப்போ

இருள்சூழ்ந்த இவ்வனத்தில் வந்தேன்
எங்குமறியேனே சங்கரனே
அருள் தருமரிஷிகளை தேடினுன்
அவர்பதம்கிடைக்காமல் நொந்தழுவேன்
கண்டபேரண்டங்களா நல்ல
காட்டானைசிங்கங் கரடிகளா
மண்டலங்களஞ்சும் புலியினங்காள்
மானினங்காள் மயிலினங்காள்
ஆடும்மயிலினமே நல்ல
அன்னங்களாகிளி வர்ணங்களா
பாடும்குயிலினமே நீங்கள்
பண்டுமுனிவரைக் கண்டதுண்டா

பொது வசனம்

இவ்விதமாக மகத தேசாதிபதியான பிரகுர்த்தி மகா ராஜன் என்னும் மரகதமகாராஜன் ரிஷியாசிரமம் தேடி வரும்போது அவர் முன்பாக சண்டக்கௌசிகரிஷி வருகிற விதங் காண்க.

சண்டக்கௌசிகரிஷி வருகிற கவி

எதிரிலாமகதமன்னன் ஏங்கியேதேடும்போது
முதிர்ந்ததத்துவமுணர்ந்த மூவரும்மயங்கிசூழ
நதிமதிசடையணிந்த நாதனைப்பணிந்தன்பாக
கதிரொளிவதனசண்டக் கௌசிகர்வருகின்ருரோ.

சண்டக்கௌசிகர் வருகிற தரு

சண்டக்கௌசிகர் நானே உலகில்கீர்த்தி
கொண்டக்கௌசிகர் நானே
கண்டக்கோடாலிகாலி காம்பரமேந்தியே
கண்டிகைபிரண்டாட குண்டலமசைந்தாட சண்
கக்ஷிவாரிஷியும் நானே முனிவர்க்கெல்லாம்
இஷ்டமாகி வந்தேனே
பக்ஷமாகியென்றும் பதஞ்சலிவியாக்கிரபாதர்
பாதமேகுடிகொண்டு வேதம்மிகவேயுண்டு சண்

செய்யக்குவளைஜொலிக்க அழகில்மிக்க
கையிற்கடகமொலிக்க
வெய்யவன்போலவே விளங்கும்தூளிதம்பூசி
வெத்திச்சடைகளாட சுத்திமுனிவர்கூட சண்
முல்லைமல்லிகைசூடி வெகுஅன்பர்நெருங்க
நல்லமுனிவர்கூடி
சொல்லும்மறையோர்பாட சோதிப்பளபளென்ன
சுந்தரமணம்பூண வந்துராஜனைக்காண சண்

மரகதராஜன் சொல் கவி

விரித்தசெஞ்சடையிலங்க மெய்யருள் தனைபாலிக்கும்
தெரிந்தமெய்ஞ்ஞானியுந்தன் திருவடிக்கடியேன்போற்றி
வருந்தியேவந்தேனுந்தன் மலரடிக்கடிமையாக
பரிந்துமே என்னையாளும் பராபரப்பொருளேபோற்றி

மரகதராஜன் சொல் வசனம்

சருணம் சருணமையா சுவாமி செஞ்சடாதாரியாகிய பரமசிவனைப்போலும் விளங்கானின்ற மெஞ்ஞானியே நான் மன வருத்தத்தினல் உமது திருவடிக்கு பரிசாலம்செய்யும் படியாக வந்தேன் என்னை ஆண்டருளும்படியாக உமது திருவடிக்கு சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தேன் முனிநாதரே.

கௌசிகர் சொல் கவி

ஆரப்பாநீதானிந்த அடவியில்தபசியாக
நீரப்பாவேஷம்பூண்டு நேசித்துவந்ததென்ன
கூரப்பாயின்னதென்று கொஞ்சமுமொளித்திடாமல்
சீரப்பாபெருவாயந்த சிவனருளாலேவாழி.

கௌசிகர் சொல் வசனம்

அகோவாருமப்பா இராஜனே நீ எந்த தேசம். உன்னுடைய பெயரென்ன, இப்படி தவவேடம்பூண்டு எனக்குப் பணிவிடை செய்யவந்ததென்ன, நீ சிவகடாக்ஷத்தினலே மிகுந்த செல்வத்தையடையப்போகிருய். நம்மை நாடி வந்த சங்கதி ஒன்றுமொளியாமல் சொல்லும் இராஜனே

மரகதராஜன் சொல் தரு

பருதிகுலக்குருநாதனே என்பேர்
பிரகுர்தனென்பார் வேதனே
உருதிமகததேசம் உலகாளயெனக்குப்பின்
உதவியாகவொரு புத்ரனில்லாமல்வந்தேனே பரு

கௌசிகர் சொல் தரு

மைந்தனில்லாமல்வாடியே நீயும்
எந்தனைக்காணவே தேடியே
வந்தவிதமென்னு மாராட்டம்பேசாமல்
சிந்தையிலன்பாக தெரியச்சொல்லுமன்னு மைந்

மரகதராஜன் சொல் தரு

தபம்செய்யும்விதமெல்லாம் விள்ளவே வேண
உபதேசம்அருள்பெற்றுக் கொள்ளவே
செபம்செய்யும் முனிவரைத் தேடிவந்தேனிங்கே
செல்வன்கிடைக்கவே நல்வகையருள்செய்யும் தபம்

கௌசிகர் சொல் தரு

உங்கள்குலக்குருமாரனே நம்மை
எங்குமறியாதோ தீரனே
சங்கைப்படவேண்டாம் சந்தானம்பெற்றுமே
தாழ்வில்லாவரசுநீ வாழ்வைப்பெருவாய் உங்

மரகதராஜன் சொல் கவி

இலக்குமிகடாக்ஷத்தாலும் இறையவனருளினாலும்
குலக்குருபாதங்காண கோடிபுண்ணியம்செய்தேனோ
பலகுணம்புகழும்கீர்த்தி பாலனெனக்களித்து
கலக்கமற்றிடவேயிக்கக் கருணைசெய்தாளுவீரே.

மரகதராஜன் சொல் வசனம்

சுருணம் சருணமையாசுவாமி முனிநாதரே லக்ஷிமி கடாக்ஷத்தினாலும் மகாதேவனருளினாலும் உமது திருவடியைக்கண்டு தரிசிக்க அடியேன் முன் ஜன்மத்தில் என்ன புண்ணியம் செய்தேனோ அறிகிலேன். இப்பவும்

புஜபலகீர்த்தி வலிமை புகழும்படியாக ஒரு புத்திர சந்தான மளித்து ரட்சிக்க வேண்டும் குருநாதனே.

கெளசிகர் சொல் கவி

செப்பியபடியுண்டாகும் சிவன்பாதம்நாடி நீயும்
தப்பிதமில்லாச்சிந்தை தவமதுசெய்யவேண்டாம்
இப்பவேகனியளிப்பேன் இன்பமாயுதிக்குமன்னன்
கைப்பலனுண்டுசுத்தக் கனிகொண்டுவருகுவேனே.

கெளசிகர் சொல் வசனம்

அகோகேளுமப்பா அன்பனே, நீ எண்ணியபடி நிறைவேறும் சிவத்தை நோக்கி தபம் செய்யவேண்டாம். ஒரு மாங்கனி தருகிறேன் அதைக் கொண்டுபோய் உன் தேவியை புசிக்கச் செய்தால் அதனால் உனக்கு சந்ததியுண்டாகும். ஆகையால், அந்தக் கனியைக் கொண்டு வருகிறேன் இவ்விடத்திலேதானே இருமப்பா அன்பனே.

பொது வசனம்

இவ்விதமாக கெளசிகர் மரகதராஜனுக்குத் திடஞ் சொல்லிவிட்டு சூதவிருக்ஷத்தின் கீழிருந்து மாங்கனி யுண்டாக வேணுமென்று பரமசிவத்தை நோக்கி தோத்திரம் செய்கிற விதங் காண்க.

கெளசிகர் பரமசிவத்தை துதிக்கும் தரு

மானும்மழுவும் கரத்தினில் ஏந்திய கையனே
நானுமுந்தன் திருவடிநாடித் துதிசெய்தே னய்யனே
வேதப்பொருளாய் விளங்குந் தயாநிதிசீலனே இந்த
சூதவிருக்ஷத்தின் கனிதாரும் சூல கபாலனே
கங்கை சடாதார காமனையெரிசெய்த நாதனே
என்கையில் கனியொன்று யின்பமாகவா நீதனே
சிபமது செய்திட சிவனருளால் கனிவந்திட
தபமது பெருகவே துய்யனுக்காகவே தந்திட மா

கெளசிகர் சொல் வசனம்

கேளும் மகாராஜனே இதோ பரமசிவனுடைய அனுக்கிரகத்தினாலே மாங்கனி எனது கையில் வந்தது. இதை

உன் தேவியை புசிக்கச் செய்தால் கீர்த்தி வல்லவனு சந்தான முண்டாகும் இதை பெற்றுக்கொண்டு போய்வாரு மகாராஜனே.

பொது கவி

கனிதனைக்கரத்திலேந்தி கண்களிலொத்திக்கொண்டு
இனிதானமனங்களித்து இன்பமாய்முனியைப்போற்றி
தனியாகநகரம்வந்து தன்னிருப்பிடமேசென்று
புனிதனும்தேவிமார்க்குப் பூரித்துவுரைசெய்வானே.

பொது வசனம்

இவ்விதமாக மரகதராஜன் கௌசிகனிடத்தில் மா கனியைப் பெற்றுக்கொண்டு அம் முனிவரை வணங் விடை பெற்றுக்கொண்டு தன் நகரம் சென்று அரண்மனை சேர்ந்து தன்னுடைய தேவிமார்களைப் பார்த்துச் சொல் கிற விதங் காண்க.

மரகதராஜன் சொல் கவி

தீங்கில்லாதேவிமாரே தேசிகக்குருவாலிந்த
மாங்கனிபெற்றுநானும் மதியில்லாதவனுமானேன்
பூங்கொடிமாரேநீங்கள் பொருத்தமாயொருத்தியுண்டு
ஓங்கியகுலந்தழைக்க உதவிசெய்தருளுவீரே.

மரகதராஜன் சொல் வசனம்

கேளும் எனது தேவிமார்களே! நான் தபஞ் செய் ஏதுவையான உபதேசம் பெரும்படிக்கு எமது குலக்கு வான சண்டக்கௌசிக மகா முனியை வணங்கி, நமது குறைகளைச் சொல்ல அவர் மனங்களித்து இதனாலே சந்த யுண்டாகுமென்று அனுப்பினர். நான் மதியில்லாமல் இரண்டு கனி கேளாமல் மோசம்போனேன். நீங்கள் யார வது ஒருத்தி வாது செய்யாமல் இந்தக் கனியை ஒருத் யாகப் பொசித்து நமது குலம் தழைக்கும்படி செய்யுங் கள் எனது பிராணவதிகளே.

கற்பினி சொல் தரு

மூத்தமனைவி நானுமே யெனக்குத்தந்து
மோகந்தீருவாய் மன்னனே
ஏற்றுக்கொள்ளுமுலகில் எனக்குத்தரவேநீதி
மாற்றி வேறேயொன்று மறித்துப்பே சொண்ணுது மூத்

மரகதராஜன் சொல் தரு

எனது இளையதேவியே இந்தக்கனியை
இச்சைகொள்ளாதே மேவியே
உனதுதமக்கைசொல்லுக் குடன்பட்டிருந்திடாமல்
மனதுகவலைகொண்டு வருத்தப்படவும்வேண்டாம் என

பொற்பினி சொல் தரு

இளமைப்பருவமுள்ளவள் மைந்தனைப்பெற
எப்போதும் நலமுள்ளவள்
வளமைபெறவேநீங்கள் மகிழ்ச்சியுடனேதந்தால்
உளமதுமகிழ்ந்திட உண்டுகளிப்பேனும் இட

மரகதராஜன் சொல் தரு

கற்பினியாளே அன்னமே ஒருகுறையும்
கருத்திலெண்ணாதே சொர்னமே
பொற்பினுக்குத்தந்தாலே புகழும்கீர்த்தியுண்டு
சொற்படிகேளும்பெண்ணே தொடுவழக்குப்பேசாதே கற்

கற்பினி சொல் தரு

எந்தன் சுகத்தைக்கொள்ளவே யெங்குமறிய
இச்சைக்கொண்டவள் மெள்ளவே
வந்தவளும்பொசிக்க மனந்தரித்திருப்பேனே
சந்தோஷமாயெனக்கு தாரும்பிராணநாயகா எந்

மரகதராஜன் சொல் தரு

வர்னசுந்தரக்கன்னியே பிந்தியதார
மாகவந்தவளும் நீயே
அன்னமே இதற்காக ஆசைகொள்ளவும்வேண்டாம்
முன்னமேவந்தவள் மொழியைத்தடுக்கலாமோ வர்

பொற்பினி சொல் தரு

சத்தியம் செய்திருக்கிறீர் எப்பொருளையும்
சமனாய்த்தருவ தென்றுமே
பத்தியதைமறந்து பங்கிட்டுத்தந்திடாமல்
புத்திவேருகியே பிரித்துச்சொல்லுவதென்ன சத்

மரகதராஜன் சொல் கந்தார்த்தம்

கோவையின்கனியேபெண்ணே கொடுத்திடும்பொருள்
பாவையேசமனையெண்ணி பங்கிட்டுத்தருவதாக [ளெல்
பூவையேசொன்னவர்க்கு புரவலன்தவறுவேனே
ஆவலாய்க் கனியைரெண் ாய்

— மரகதராஜன் சொல் தரு

அறுத்துமேதருவேன் இருவருக்கு
அறுத்துமே தருவே
அறுத்திரண்டாகவே ஆசையாகவேதந்தே
கருத்தில்சிவனை நாடி களிப்புடன்பொசியுங்கள்

கற்பினிசொல் கந்தார்த்தம்

மன்னர்மன்னவனேமுன்பு மங்கையாளிருவருக்கும்
சொன்னசொல்தவறிடாமல் சுந்தராகொண்டுவந்த
வர்ணமாங்கனியைரெண்டாய் வாள்கொண்டுபிளவுசெ
கன்னியர் களிக்கநெஞ்சம்.

கற்பினி சொல் தரு

களித்துவுண்டோமே மாங்கனிதனை
களித்து வுண்டோமே
களித்துப்பரமன்பாதம் கைதொழுதேத்தியே
அளித்திடுமதனையென் றஞ்சலிசெய்துமே க

பொது கவி

ஒருகனிபிளந்துரெண்டாய் உண்ணவேவயறுதன்னில்
அருவயர்தனக்குப்போது ஆகவேகெர்ப்பமூறி
வருகவேசடங்குசெய்து வளந்திடும்பத்துதிங்கள்
இருவரும்கெர்ப்பவாதைக் கிடம்பெறவருந்துவாரே.

பொது வசனம்

இவ்விதமாக ஒரு மாங்கனியைப் பகர்ந்து தேவி
இருவரும் பொசித்தபடியால் இருவருக்கும் கெர்ப்பந்தரித்
வயிற்றில் கெர்ப்ப மூறிவர கெர்ப்பமுற்றி பத்துதிங்களா
பிறகு இருவரும் கெர்ப்பவாதனைப் படுகிறவிதங் காண்க.

கற்பினிக்கும் பொற்பினிக்கும் தர்க்கத் தரு

ம்மம்மா என்னசெய்குவேன் எந்தன் தங்கையே
டிவயறுநோகுதோடி என்னசெய்குவேன்

பொற்பினி சொல் தரு

ந்மையிலேநானறியேன் எந்தன் தமக்கையே
எக்கிடுப்புநோகுதுநா னென்னசெய்குவேன்

கற்பினி சொல் தரு

ாஞ்சமில்லைகெர்ப்பவாதை தாதிமார்களே
ாலையிலோடிமுட்டுதோடி என்னசெய்குவேன்

பொற்பினி சொல் தரு

ஞ்சுதடிஎன்மனது அக்கமார்களே
யோவாதைமிஞ்சுதடி என்னசெய்குவேன்

கற்பினி சொல் தரு

ன்னமாய்நான் தாளுவண்டி தாதிமார்களே
டையுமற்றுப்போகுதடி என்னசெய்குவேன்

பொற்பினி சொல் தரு

ர்ணமானமேனியெல்லாம் வாடிசோருதே
தரசேதாளேனம்மா என்னசெய்குவேன்

கற்பினி சொல் தரு

யோவாதைமீருதோடி நான் தாளேனம்மணி
ருஆதரவுசொல்லுங்கடி பாங்கிமார்களே

பொற்பினி சொல் தரு

மய்யெல்லாம்புண்ணுகுதோடி அக்கமார்களே
மல்லியரேதாளேனம்மா என்னசெய்குவேன்

பொது வசனம்

இவ்விதமாக பொற்பினியும் கற்பினியும் கற்பவாதைப்
ட்டுக் கொண்டிருக்கும்போது மருத்துவக்கிழவி வருகிற
தைங் காண்க.

### மருத்துவச்சி வருகிற தரு

வந்தாளே மருத்துவச்சி சந்தோஷமாக
வாராளேமருத்துவச்சி சிந்தையிலன்பாய்
கந்தக்கலைதானுடுத்தி கையில்பவளங்கட்டி

சாய்ந்தநடைநடந்து தள்ளாடித்தள்ளாடிக்கொண்டு
தேய்ந்தமுகம்தொங்கும்காதும் சிரிப்பும்கெலிப்புமாக

மெத்தவேதடியையூணி வில்லுபோல்முதுகுங்கோணி
நத்துமூக்குந்தொங்கமார்பு நட்டநடைகெட்டிக்காரி

நரைத்த"தலைபம்மைகாளி நாடெங்கும்திரிந்தமூளி
சிரத்தையசைத்தசைத்து சிங்காரநடைநடந்து

### கற்பினி பொற்பினி சொல் சீசபத்தியம்

ஐயையோமருத்துவ அம்மணியென்செய்வோம்
அடிவயருளைக்குதே அதிகமாக
வையகந்தன்னிலே வந்தநாளிதுகாலம்
வருத்தமிப்படிநாங்கள் அறியமாட்டோம்
மெய்யெலாப் வாடியேமிகுவலிமீறியே
வேர்த்தெங்களுடலமும் சோருதம்மா
தையலாள்படும்பாஸ்தயது சங்கரரறிகுவார்
தாளாதவாதையதுமீறுதம்மா
கையினிற்கவுர்தந்து கலக்கமறவே
செய்யும்தேவதைகள் சிந்தைநோக
பையலேமருத்துவம்பார்த்து வரவே
ஒய்யாரபிள்ளைகள் உதித்ததுதாயே.

### கற்பினி பொற்பினி சொல் தரு

பாலன்பிறந்ததைப் பாரும் விகாரமாக
பாலன்பிறந்ததைப் பாரும்
பாலன்பிறந்தானிதோ கோலாகலமாகவே
காலாகாலன்செயலோ காந்தியதாகவே பா

சங்கரன்கிருபைதானோ அங்கமும்பேர்பாதியாக
மாங்கனிதந்தவிதமோ தேங்கவேயிருவருக்கும் பா

என்னபாவம்செய்தோமோ இருவர்வயற்றிலும்
அன்னவன்செயல்தானோ அங்கம்விகாரமாக பால
பெற்றும்மலடியானோம் பிள்ளைசுகங்காணமல்
இக்குற்றத்தைமன்னனுக்கு கூறுங்கள் சகிமாரே பால

கற்பினி பொற்பினி சொல் கவி

என்னனுன்செய்வேன்பாங்கி இருவர்கள்வயற்றில்வந்த
வர்ணமாங்குழந்தைபாதி வடிவமும்ஒன்றுரெண்டாய்
மன்னவர்க்கழகோபிர்மன் வகுத்திடக்கனியால்வந்த
அன்னீதமிதுவோசுவாமி ஐயையோஎன்னசெய்வோம்.

கற்பினி பொற்பினி சொல் வசனம்

அகோ கேளுங்களம்மா பாங்கிமார்களே எங்கள் இருவர் வயிற்றில் பிறந்த குழந்தைகளானது இருபிளவாக எங்கள் இரண்டுபேர் வயற்றில் பிறந்ததே எமது மன்னவருக்குத் தகுமா பிரமனிப்படி வகுக்கலாமோ மாங்கனியினுல் வந்த கர்ப்பனையோ இதற்கு என்ன செய்வேன் தெய்வமே.

கற்பினி பொற்பினி புலம்பல் தரு

மைந்தன்பிறந்தானென்று மகாராஜாதுரபதி
மகிழ்ச்சிகொண்டிருப்பாரே தெய்வமே
சந்தானம்வேண்டியே அன்பாய்தவமிருந்து
தனயன்தனையளிக்க தெய்வமே
ஒருகாலும்ஒருகையும் ஒருகண்ணும்காதுமாக
உதிக்கத்தலைவிதியோ தெய்வமே
இருபாதியாகவே எங்கள்வயற்றில்வந்து
ஏங்கவிதித்தாயோ தெய்வமே
சதிகாரப்பாவியாலே கர்ப்பனைவந்ததென்று
தாரத்தைநிந்திப்பாரே தெய்வமே
விதிப்பயனுலேயிந்த விதிவசமிதுதானோ
விழலுக்கிறைத்தநீர்போல் தெய்வமே
மைந்தன்பிறந்தானென்று மகிழ்ச்சியாயிருப்பாரே
மன்னருக்கென்னசொல்வோம் தெய்வமே

### கற்பினி சொல் கவி

மாதவம்தன்னுல்வந்த மைந்தனுமினிவளர்ந்து
சாதனமாகயிந்தத் தரணியையாள்வதுண்டோ
தீதரநீங்களிந்த சிசுக்களையெடுத்துக்கொண்டு
காதலாய்அரசனுக்கு காட்டியேயுரைசெய்வீரே.

### கற்பினி சொல் வசனம்

கேளுங்களம்மா பாங்கிமார்களே இந்த அமக்குறியான சிசுக்களானது வளர்ந்து உலகாளுவதுண்டோ நீங்களிந்த சிசுக்களைக் கொண்டுபோய் அரசனுக்குக் காண்பித்து வாருங்கள் சகிமார்களே.

### பொது வசனம்

அகோதெப்படியென்றுல் கற்பினி பொற்பினி வார்த்தைப் பிரகாரம் அங்கவிகாரமாகப் பிறந்த சிசுக்களை தாதிகள் அரசனுக்குக் காண்பிக்க அதைப் பார்த்து மரகதராஜன் ஏதென்றுச் சொல்லுகிற விதங் காண்க.

### மரகதராஜன் சொல் கவி

மந்திரிஇதனைப்பாராய் மானிலந்தனிலில்லாத
சுந்தரப்பாலன்மேனி துலங்கிடப்பிளவுரெண்டாய்
வந்த்துஇருவருக்கும் மாங்கனிபகுத்ததாலே
தந்ததுஇழிவுகூற தயாபராயென்னசெய்வேன்.

### மரகதராஜன் புலம்பல் தரு

என்னபாவங்கள் செய்தேனே
இந்தமைந்தனுமிப்படி வந்துபிறந்திட என்

சொன்னரேமுனிவரும் சூரதீரமுடைய
சுதன்வந்துதிப்பானென்றுர் அதுவும்பொய்யல்லமந்திரி என்

பாவிதாரத்தாலிப்படி பங்கமடையமைந்தன்
சங்கையுண்டாச்சுதே பாவிதாரத்தாலிப்படி என்

ஆவிபதறத்தானே அருத்துமாங்கனிதன்னை
அதனுலேஇருவகை சுதன்வந்துதிக்கலாச்சே என்

அறியாமல்மோசம்போனேனே நான் அறுத்துமாங் கனிதன்னை
பிறக்குமிப்படியென்று அறியாமல்மோசம்போனேனே
தெரியாதபுத்தியாலே சின்னப்படவேமைந்தன்
சிந்தைகலங்கிமனம் நொந்துபுண்ணுகுதே என்
உலகாளுமென்றிருந்தேனே உள்ளப்படிக்குநல்ல
பிள்ளைபிறந்துமே உலகாளுமென்றிருந்தேனே
பலமானபுகழ்கீர்த்தி படைத்துலகாளாமல்
பாதிபாதிபாதியாக வந்ததிதுவிதியோ என்

மரகதராஜன் சொல் கந்தார்த்தம்

வடிவானமைந்தனை வைத்தென்னபலனுண்டாமோ
மடிவாகசெய்தாரெந்தன் மாபாவிதேவிமார்கள்
அடிபோலயாக்ரமித்து எழுந்துமேகோபங்கொண்டு
கடிதாகக்காலைபற்றி

மரகதராஜன் சொல் தரு

கரகரவென்றுசுற்றினேன் யாவருமஞ்ச கரகரவென்று சுரு
கரகரவென்றுமே திறமுடன்கழியில்
உரமுடன்போய்விழ பரமனைநொந்து கர

மரகதராஜன் சொல் கந்தார்த்தம்

ஒருகாலைக்கடிந்துபற்றி ஒன்றையும்விட்டெறிந்து
மறுகாலைத்துடர்ந்துபற்றி வையகமெல்லாமஞ்ச
இருகோலத்தாலேயானும் இனியில்லாக்கோபம்கொண்டு
வருங்காலவிதியேயென்று

மரகதராஜன் சொல் தரு

வல்லமைக்கொண்டுவீசினேன் கரகரென்று-வல் சுரு
வல்லமைமிஞ்சியே எல்லோருமஞ்சவே
செல்லவேயின்பமும் மெல்லியர்வாட வல்

பொது கவி

இறைவனும்கோபங்கொண்டு எறிந்திட அகழிதன்னில்
மறையவன்கிருபையாலும் மகாதேவனருளினாலும்
கறைமீதில்இரண்டுமொன்றாய்க் கலந்துமேபொருந்திவீழ
சறையெனும்தேவிகாளி சார்ந்திடவருகின்றாளே,

## பொது வசனம்

இவ்விதமாக மரகதராஜனனவன் கோபித்து இரண்டு குழந்தைகளையும் விசிரி எறியும்போது இரண்டும் அகலு சலத்தில் விழும் பொழுது அது பிரமதேவன் கற்பனையிலு லும் பரமசிவனுடைய கடாக்ஷத்தினாலும் இரண்டு சிசுக் களும் ஒரு உருவமாகி பொருந்தி வீழ்ந்திருக்க சூரியன் அஸ்தமாகி கங்குலடைந்துவிட சரதேவி என்னும் துர்க்க தேவி பசியினால் இறைதேட வருகிறவிதங்காண்க.

### சரதேவி வருகிற கவி

மலைநிகருருவமீறி மண்ணும்விண்ணதிரதாண்டி
கலையெனும்தந்தம்வீச கண்டவர்நடுநடுங்க
சிலையுருவதனரூபி சிங்கம்போல்ஆக்ரமித்து
தலைவிரிகரங்கள்வீச சரதேவிவருகின்றாளே.

### சரதேவி வருகிற தரு

சரதேவிகோலா காளியிதோவந்தாள்
சந்திரப்பிறை தந்தம்வீசவே
வந்தவீரரும் நொந்துகூசவே
மறைமேவியநீலி சங்கரிபோலே
மண்டலங்கெடி கொண்டரூபணி
அண்டமளாவிய கண்ட துண்டணி
உக்ரதீரஅகோர மிஞ்சியசீலி நல்ல
உதயச்சந்திர வதனம்பெருகிட
வதனவஞ்சியா ளிதயமுருகிட
திக்குதிசைகளை நோக்கிக் கண்களையுருட்டி
தேடியிறைகளை வாடிப்பதுங்கியே
நாடிவனமெல்லாம் ஓடிபொதுங்கியே
சண்டனெதிர்வர அஞ்சும்வல்லமைசாவி
தாடகைக்கு இவ ளீடுமென்னவே
சூடகப்பிறை கோடுதுன்னவே
கண்டபேய்பூதம் பிரமராக்ஷதர்வாட
கண்டசரமணி தண்டையாகவே
மண்டிகீதமும் கொண்டுபாடவே

மெத்தவேபசிமீறியே நல்லஇறைதேடி
வெடியகானகம் முடியதேடியே
டியமனிதர்க அடியைநாடியே
த்தமிஞ்சியே அகழிகரைதனைதேடி
ாரும்போதிரு கூருகண்டுமே
ருவோம்பசி யாருமென்றுமே
ரதேவிகோலா காலியிதோவந்தாள்

சரதேவி சொல் கவி

பார்த்துமேபிள்ளை தூங்கும்பாவனையென்கையாலே
சேர்த்துமேஎடுக்கும்போது சீருருபொருந்தியொன்ருய்
வேர்த்துமேஅழவுங்கண்டேன் விதிவசமின்னதென்று
நாதனேவிபரமொன்றும் நானுமேயறிகிலேனே.

சரதேவி சொல் வசனம்

நான் இந்த அகழிக்கரையில் இருபிளவாய்த் தூங்கும் ாலகனை பக்ஷிக்கும்படி சேர்த்து ஒன்ருக எடுக்கும்போது ிரண்டு உருவமும் ஒன்ருகப் பொருந்தி அழக்கண்டேன் ான் யாது மறிகிலேன் கர்த்தனே.

சரதேவி சொல் தரு

பாசித்தாலிந்தபாலனைப் பசிதணிவதுமுண்டோ
பாங்கராசங்கரா ஆதி சங்கராகெங்காதரா
சித்திருந்தாலுலகில் உசித்திருக்குமேசெல்வம்
ாசனேநேசனே கயிலாசனேமகேசனே
ந்தபாலன்தன்னையுண்ண வந்திடுமதிகபாபம்
கனேயோகனே வைபோகனே விடைவாகனே
ந்ததியில்லாமல்வாடும் இந்தநாளரசனுக்கு
ந்திடவந்திடும்புகழ் சுந்தரமானமைந்தனை
ந்ததென்ன இப்படிக்கு எந்தவிதம்நானறியேன்
ாரணுகாரணு பரிபூரணுஆதிநாரணு
த்தலோகங்களெல்லாம் மெத்தவேபயந்தேத்தும் பாலன்
ீரமும்கோரமுடன் முகாரமும்வீரதீரமும்
இப்படியோகசாலியாம் செய்யவும்பிறந்தபிள்ளை
ரகுமோசாகுமோஉயிர்போகுமோ என்னுலாகுமோ

கைப்பிடியாய்கொண்டுமன்னன் ஒப்பில்லாமனங்களிக்க
காட்டுவேனின்பம்பூட்டுவேன் நிலைநாட்டுவேன் வெ

பொது வசனம்

இவ்விதமாக சரதேவி குழந்தையை எடுத்துக்கொண் வந்து பிறகுர்தி மகாராஜனைக் கண்டு சொல்லுகிற வித காண்க.

சரதேவி சொல் கவி

மன்னவாகேளுமுந்தன் மணிமுடியதனைப்பெற்று
ஜெகதலமதனையாள சந்தோஷம்பெருகிநல்ல
தகதகென்றிலங்குமிந்த சந்தானம்கிடைத்ததிப்போ [வே
விசிதமாய்அளிக்கவந்தேன் வேந்தனேகைக்கொள்வா

சரதேவி சொல் வசனம்

கேளும் மரகதராஜனே உம்முடைய நவமணி ளிழைத்த கிரீடம் தாங்கி இந்த உலகமெல்லாம் ஆளு படிக்கு எனக்கு தேவானுகூலத்தினால் ஒரு சிசுவான கிடைத்தது உமக்கு சந்ததியில்லாதபடியினாலே இந்தப் பி காசம் பொருந்திய பிள்ளையை உனக்கு அளிக்கும்படியா வந்தேன் நீர் சந்தோஷமாக பெற்றுக் கொள்ளும் மக ராஜனே.

மரகதராஜன் சொல் தரு

எந்தனுக்கின்பமாய் சந்தானந்தரவந்த
இணையடிசருணமம்மா சரதேவி இணையடிக்கு
சிந்தையிலன்பாக மைந்தனைக்கொண்டுவந்தாய்
கிருபையை மைந்தனால் வருமைதீர்ந்தேனம்மா எ

சரதேவி சொல் தரு

சராசந்தனென்றுமே நிறைமைந்தனுக்குப்பெயர்
சாற்றினேன்பேர்விளங்க இராஜரூபா
தரையும்புவனமெல்லாம் எங்கும்பேர்விளங்கவே
சண்டனும்பயந்தேங்க எண்டிசைகொடியோங்க சர

மரகதராஜன் சொல் தரு

முன்செய்தபாவந்தானோ என்குலம்நலந்தானோ
மொழியும்தர்பமிதுவோ சரதேவி மொழியும்

உன்செயலாலேநான் உலகாளநலம்பெற்றேன்
ஒதரிதாகிய பாதம்வந்தனமம்மா முன்

சரதேவி சொல் தரு

எட்டுதிசையுங்கை கட்டிவணங்கவே
எங்கும்கீர்த்திபெறுவான் இந்தமைந்தன் எம்
மட்டுமிதமில்லாத கீர்த்திப்பெருகியே
வாழ்வும்பெருவான்பாலன் தாழ்வில்லேபோய்வாரேன் எட்

மரகதராஜன் சொல் வசனம்

அகோவாருமம்மா தாயே சரதேவி, நீ மனதில் சந்தோஷமாக அளித்த பாலனே வாங்கிக்கொண்டேன் போய்வாருமம்மா சரதேவியே.

மரகதராஜன் சொல் கவி

தரைமேவும்எனதுதேவி தையலேசொல்லக்கேளாய்
குறைதீரமனம்பூரித்துக் குவலயமாளவேண்டி
சரதேவிமகிழ்ந்துயிந்த சந்தானம்தன்னேத்தந்தாள்
நிரைமனதாகவைத்து நீங்களும்வளர்த்திடீரே.

மரகதராஜன் சொல் வசனம்

கேளுங்கள் எனது தேவிமார்களே நமக்கு குமாரவர்க்கத்தினுடைய குறைதீரும்படி சரதேவியானவள் இந்தக் குழந்தையை அன்பாகத் தந்துபோயினுள் இதை சந்தோஷமாக வளர்த்துவாருங்கள் எனது தேவிமார்களே.

கற்பினி பொற்பினி சொல் கொச்சகம்

மன்னவன்மகிழ்ந்தளித்த மைந்தனேமுத்தமிட்டு
வர்ணமுலேப்பால்கொடுத்து மணிபணியும்சீராட்டி
மின்னலொலிபோல்விளங்க விரும்பிவிருமாதர்களும்
கன்னல்மதம்போலே கடுகிவளர்த்தாரே.

பொது வசனம்

இவ்விதமாக பிரகுர்திமகாராஜன் அளித்த குழந்தையை ஆசையோடு முத்தமிட்டு பாலூட்டி பணிமேல்மணிபூட்டி நாளொரு வண்ணம் பொழுதொரு மேனியாக

வளர்த்து ஐந்துவயதான பின்பு சண்டக் கௌசிக முனி ரால் மிகுந்த வித்தைகளெல்லாம் கற்பித்து மன்மதன் லும் விளங்கி ஏழுவயதுக்குள்ளாக குமாரன் மிகு சாமர்த்தியவானாக இருக்கிறானென்று மரகதராஜன் மன சந்தோஷித்து மந்திரிகளைப் பார்த்துச் சொல்லுகிறவித காண்க.

மரகதராஜன் சொல் கவி

தென்பான எனதுமந்திரி ஜெகமெலாம்கீர்த்தியோங்
என்பாலன்தனக்குயிப்போ இளவரசளிக்கவேண்டி
அன்பானமுகூர்த்தமிட்டு அரசரைவரவழைத்தேன்
முன்பாகமைந்தன்தன்னை முடிசூட்டஅழைத்துவாரீர்

மரகதராஜன் சொல் வசனம்

கேளும் மந்திரிமார்களே எனது குமாரனான சராசந் னுக்கு ஏழுவயது ஆனபடியால் இளவரசுபட்டம் அளிக் வேண்டும். இரண்டாவது அதற்கு முகூர்த்தநாளிட் ராஜராஜரை அழைப்பித்து இருக்கிறோம் இப்போது எனது குமாரனை என்முன்பாக அழைத்துவாருங்கள் மந்திரிமா களே.

சராசந்தன் வருகிற கவி

மண்டலம்புகழும்கீர்த்தி வல்லகெம்பீரமுள்ள
அண்டருமதிசயிக்க அணிமணிபணிகளாட
குண்டலமிலங்குஞ்ஜோதி கூர்விழிமாதராட
சண்டப்பிரசண்டனான சராசந்தன் வருகின்றானே.

சராசந்தன் வருகிற தரு

தர்மத்தில்மனம்வைத்த பிரகுர்த்திதன்பெற்ற
சராசந்தராஜன்வந்தான் பலபணிதுன்ன
ஒருமித்தரசர்சூழ ஒளிபெற்றநவமணி சு
உன்னதபணிகளும் மின்னியசாமரை
வன்னிசிரோன்மணி கன்னியர்வீச த
சல்லரிமுரசுபேரி மல்லரிடமரம்டங்கா
சத்ததாளம்முழங்கவே பார்பைதுத்தாரி
சொல்லரியதேசமன்னர் வல்லவர்கண்டுகொண்டாட சு
சொற்பெருமழகிய மற்புயமணிபணி
பொற்பினிலதிவித நற்பெறுமைந்தன் த

ஙாமன்மதன்போலே வாளும்பளபளென்ன
டககங்கணம்ஜொலிக்க நல்ல ஆரகேயூர
ளம்தம்பூருபாட தையலர் எதிராட சுரு

சரையெனுந்தேவதை திருவளம்பெருகிய
இறைவன்மகிழவே குறையறவந்த தர்

ச்சிரமழுத்திய பச்சைமரகதம்
லிகைமார்பிலாடவே தாவடம்மணி
ச்சமில்லாமல்தந்தை அழைத்தவிதமறிய சுரு

அண்டியமாமணி தண்டையும்கொலுசுகள்
கொண்டுகீதமும் மண்டியேபாடிட தர்

சராசந்தன் சொல் கவி

தந்தையேயுலகுமன்னர் சதுரங்கசேனைசூழ
வந்துமேபதம்வணங்கும் வல்லகெம்பீரதீரா
சுந்தரப்பாதம்போற்றி துலங்கியசபைக்கிப்போது
எந்தனையழைத்தசேதி இன்னதென்றுரைசெய்வீரே.

சராசந்தன் சொல் வசனம்

சருணம் சருணமையா சுவாமி எனது தந்தையே தேச ன்னவர் வந்து நெருங்கி யிராநின்ற சபைக்கு என்னை வர ழைத்த காரியம் இன்னதென்று தெரியும்படி சொல்ல வேண்டும் எனது தந்தையே.

மரகதராஜன் சொல் கவி

அப்பனே எனதுசெல்வ அருமைசேர்மகனே வாழி
இப்பவேவுந்தனுக்கு இளவரசளிக்கவேண்டும்
செப்பியேயழைத்தேனெந்தன் சீர்மணிமகுடம்பூண்டு
தப்பிலாயுலகையாண்டு தழைத்துமேவருகுவாயே.

மரகதராஜன் சொல் வசனம்

வாருமப்பா எனது குமாரச்செல்வமே நீ மகாராஜனுக ாழக்கடவது உன்னை அழைத்த விபரமாவது என்ன

வென்றால் இந்த மகத தேசத்தை நீயாளும்படியாக பட்
டளிக்கும்படி என் மனதில் சந்தோஷங்கொண்டு அழைப்
பித்தேனப்பா என் அருமை குமாரகனே.

சராசந்தன் சொல் வசனம்

கேளுமய்யா சுவாமி தந்தையே அவ்விதமே தேவ
ருடைய சித்தத்தின் பிரகாரம் நடத்துமையா சுவா
தந்தையே.

சராசந்தனுக்கு பட்டம்கட்டும் தரு

மணிமுடிகொண்டானே சராசந்தன் மணிமுடி
கொண்டானே

மணிமுடிகொண்டானே மகததேசமாள
அணியணியாகவே அரசர்கள்புடைசூழ மணி
கன்னியரிருபுறம் கவரிசாமரைவீச
மன்னியவேதங்கள் மகிழ்ந்துமறையோர்பேச மணி
இடிபேரிமுரசுகள் எங்குமதிரவே
வடிவானஆலாத்தி மாதர்களேத்தவே மணி
மாதனம்பாடியே மறையவர்மகிழவே
கோதானம்பூதானம் குறைவில்லாதளிக்கவே மணி

பொது கவி

பாருள்ளோர்நெருங்கிசூழப் பட்டமுந்தரித்துவைத்து
சாருவதேசமாளும் ஜெய்சேனன்புதல்வியான
ஏருள்ளசுந்தரிக்கு இஷ்டநாயகராய்ச்செய்து
நேருள்ளதந்தைதானும் நீங்கினர்தபமேசெய்ய.

பொது வசனம்

இவ்விதமாக சராசந்தனுக்கு இளவரசு பட்டமளித்து
சாருவ தூய தேசாதிபதியாகிய ஜெயசேனமகாராஜன்
புதல்வியான சாந்தசுந்தரியை சராசந்தனுக்கு விவாகம்
செய்து வைத்து தந்தையானவர் தபம் செய்ய மனதாகி
மரகதராஜன் கானகம் போய்விட, சராசந்தனும் சாந்த
சுந்தரியும் வாழ்ந்துக்கொண்டு வருங்காலத்தில் சராசந்த
னுக்கு நந்தனி சுந்தனி இரண்டு பெண் பிள்ளைகள் பிறக்க,
அவர்களை வடமதுராபட்டணம் ஆளாநின்ற கம்சமகா
ராஜனுக்கு அளித்து அவர்கள் மிகுந்த சரசசல்லாபமாக

வாழ்ந்து வரும்போது, அவர்களுக்கு சகதேவனென்கிற சந்தானம் உதித்துக் கொண்டிருக்கையில் கிருஷ்ணமூர்த்தி கொலுவுக்கு வருகிற விதங் காண்க.

கிருஷ்ணமூர்த்தி வருகிற கவி

சங்காழிதண்டம்வாளும் தனுபஞ்சவாளுமேந்தி
பங்கேருமுகமிலங்க பரிமளதுளபம்வீச
பொங்காழிமீதுயின்ற புண்ணியவேதனுதன்
சிங்காரமுடையகிருஷ்ண தேவரும்வருகின்றாரே.

கிருஷ்ணமூர்த்தி வருகிற தரு

சிங்கார அரிகிருஷ்ண தேவர்வந்தார் நல்ல
சங்காழிதண்டம்வாளும் தனுவுமிலங்க சிங்
சங்காரருத்ரதேவன் தையல்சிகாமணியாள்
மங்களசுபகர இங்கிர்தசோதரன் சுரு
வாசவன்முனிவரும் பூசனைசெய்திடும்
மாசில்லாததிரு மணிவிசுவசிகா சிங்
முத்துசரப்பளிமின்னி குலுங்க மார்பில்
சித்திரநவமணி ஆரமிலங்க
சத்தியபாமாகாளத்தி சாம்பவதி ருக்மணி
பத்தியதாகயெட்டு பட்டபஸ்திரீகள்சூழ சுரு
பரிமளதுளபமும் நருமலரணிகளும்
அருமைத்திருமணி பெருகொளிவீச சிங்
பட்டுபீதாம்பரமின்னி ஜொலிக்க-இந்த
எட்டுத்திசையோர்வந்து கரங்குவிக்க
கட்டும்கலைதுலங்க கன்னியரெதிராட
கொட்டும்மணிமுரசு கூரும்வாத்தியம்பாட சுரு
கொஞ்சியகிளிமொழி வஞ்சியரிருபுறம்
அஞ்சலாய்சவரிகள் மிஞ்சியேவீசவே சிங்
பாததண்டைகொலுசு கீதனுதமீட்டவே
தேவவேதியர்களும் வேதசங்கீதம்பாட
சீதக்களபம்வீச சிலபேர்துதித்துப்பேச
பூதலங்கெடிபெற்ற பொருந்தும்நிருதர்கூச சுரு
புந்தியில்மாரனை தந்தயாபரன்
விந்தையிலதிவித சுந்தரமாக சிங்

### கிருஷ்ணமூர்த்தி சொல் விருத்தம்

கஞ்சனென்னைக்கொல்லவிட்ட அவரைக்கொன்று
காவலரைமடித்துலகை அனந்தமூர்த்தி
குஞ்சரமும்பாகனையும் மல்லரோடு
குற்றமறக்கம்சனையும் வதையேசெய்து
வஞ்சமில்லாஉக்ரசேனன் அவருக்கிந்த
வடமதுரைதனையளித்து மகுடம்சூட்டி
நெஞ்சமதுகளித்துதம்பி தமையன்சூழ
நிகரில்லாகொலுசிம்மாதனம்வந்தேனே.

### கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

கேளும் மாதவா எனது அம்மானாகிய கஞ்சன் என்னைக் கொல்லும்படியாக விட்டனுப்பின பூதங்கள் சகடசூரன் ,இகலம்பன் கேசி முதலானவரை மடித்து அவனிடம் சென்று அவன் வில்லை முறித்து குவலயபீட மென்றும் சொல்லாநின்ற பட்டத்து யானையையும் மடித்து அதன்பேரிலிருந்த பாகனையும் வாட்டி முஷ்டிகன் சாணுரனை மல்லரையும் பிடித்து கம்சனையும் கொன்று அவன் தந்தையான உக்கிரசேனனையும் வடமதுரைக்கு அரசனாக்கி பலராமர் சாத்தகி முதலானவரும் சூழ நாம் சந்தோஷத்துடன் கொலுவாகினோமப்பா மாதவா.

### பொது வசனம்

இப்படியாக கிருஷ்ணமூர்த்தி வடமதுரையில் கொலுவாயிருக்கும்போது கம்சன் மடிந்த சேதி சராசந்தனுடைய குமாரத்திகளாகிய நந்தனி சுந்தனி என்னும் இரண்டு பெண்களும் வந்து சராசந்தனிடம் முறையிட அதைக் கேட்டு சராசந்தன் சொல்லுகிற விதங்காண்க.

### சராசந்தன் சொல் கவி

மருகனும்மடிந்தசேதி மகளிருவருமுறைக்க
உருகியேமனதுவாடி உக்ரகோபங்கள்கொண்டு

இருகரம்தனிலே அஸ்திரம் ஏந்தியேகிருஷ்ணனுவி
தருகுவேன்நமனுக்கென்று சராசந்தன்யெழுந்திட்டானே.

சராசந்தன் சொல் வசனம்

வாருங்களப்பா மந்திரிமார்களே ! வடமதுராபுரி பட்டணம் ஆளானின்ற எனது மருமகனுகிய கஞ்சனை யாதவனுகிய கிருஷ்ணமூர்த்தியானவன் கொன்று போட்டதாகவும் எனது குமாரச் செல்விகளாகிய சந்தனி சுந்தனி இருவரும் வந்து முறையிட்டுக் கொண்டபடியால் எனக்கென்ன கோபம் பிரவேசித்தது கிருஷ்ணனை சும்மா விடக்கூடாது. அகையால், நம்முடைய சேனு சைனியங்களைக் கூட்டிக்கொண்டு சமனுகிய யுத்தம் செய்யவேண்டும் அவரவர்கள் ஆயுத முஸ்தீப்புடனே சண்டைக்குப் புறப்படுங்கள் சேனைத்தலைவர்களே.

சராசந்தன் சண்டைக்கு வரும் தரு

வாருங்கள் மந்திரிமார்களே வெகு
வல்லமையுடன் வருவீர்களே
சேருங்கள் நம்மிட சேனையை வெகு
சிங்காரமாய்ப் பட்டத்தானை தன்னிலேறியே
மாட்டிடையக் கிருஷ்ணனவன் சூரனே எந்தன்
மருகனைமடிக்க யென்னதீரனே
வாட்டிடயொருகணை யெடுப்பேனே அவனை
மறலிக்கிறையாகக் கொடுப்பேனே
யாவரும்ரதமீதில் ஏறுங்கள் எனது
அதிபலசவுரியம் பாருங்கள்
தேவரொடுங்கவீரம் காட்டுவேன் அவனை
சின்னபின்னமாக வாட்டுவேன்
மகததேசம்விட்டு நாடினேம் நல்ல
வடமதுரையைக்காணத் தேடினேம்
ஜெகம்அஞ்சஜண்டாவை நாட்டுங்கள் நல்ல
ஜெயபேரிரெணபேரி மூட்டுங்கள்

பொது வசனம்

இவ்விதமாக ஜராசந்தன் கிருஷ்ணமூர்த்தியின்பேரில் சண்டைக்கு வந்ததை தூதர்களோடி கிருஷ்ணமூர்த்திக்குச் சொல்ல, அப்போது கிருஷ்ணமூர்த்தி சொல்லுகிற விதங் காண்க.

## கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

சண்டைக்குப்படையைக்கூட்டி சராசந்தன்வந்தானென்
கண்டிடதூதர்சொல்லக் கடுங்கோபம் கொண்டேனிப்பே
அண்டையிலிருக்கும்அண்ணு அருமைசாத்தகியேகேள
மண்டையும்சிதறியோட வாட்டுவோமெழுந்திடீரே.

## கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அகோ கேளும் எனது தமையனாகிய பலராமனே தம்பி சாத்தகி! சராசந்தன் நமது பேரில் சண்டை செய்யுந் தாக படையைக் கூட்டி வந்திருப்பதாய் தூதுவர் சொல்லக் கேட்டு அதிக கோபம் கொண்டேன் இப்போது அவன் மண்டை சிதறியோடும்படியாகிய சமராகிய யுத்தம் செய்யப் போவோம் வாருங்கள் சேனைகளே.

## கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

சண்டைக்குநடப்போம் வாருங்கள் — நல்ல
அதிவிதவீரரே — ரணமுக தீரரே சண்

சண்டைக்குப்படையைக்கூட்டி — சல்லரிபேரிகைமூட்டி
கண்டிக்கசராசந்தனை — கடிந்துவீரியங்காட்டி சண்
கரிபரிரதமுடன் — வருகவேதுரிதமாய்
பெருகியசபர்களும் — குறுகியே துரிதமாய் சண்

சாரங்கத்தனுவை யெடுப்பேன் — இதோ
வந்திடும் அவனிட — தந்திடும்படையுடன்
தீரங்களனைத்தும் — கெடுப்பேன்
வீரங்கள்மிகுத்தபேரை — வெல்லவல்லவனென்று
பாரெங்குமறியாரோ — படையோடவனைக்கண்டு சண்
பஞ்சுபஞ்சாகவே — மிஞ்சியேயடிக்க
சஞ்சலம்தீரவே — வஞ்சமுமுடிக்க சண்

எத்திசைபுகழ் படிக்கவே — நல்ல சல்லரிமுரசுகள்
வெற்றியுடனடிக்கவே — கரிபரிரதம்நடக்க
சத்திக்கும்மேளவாத்யம் — தாரணியெங்குமொடுங்க சண்
சாரியாய்மீரியே — வீரியர்வாடவே
தேரியேமனதுகள் — தூரியேநாடவே சண்

கஞ்சனைமடித்தேனென்றுமே அவன்மெத்தவே
வீரியம்பெற்றவனென்று நெஞ்சமும்வயிரம்கொண்டுமே
அஞ்சாமல்யெந்தனை வெல்ல ஆணவமிகுந்துவந்தான்
வஞ்சகப்பயலைக்கண்டு வாட்டுவேன்குடியோட்டுவேன்

சுரு வல்லமையெங்குமே சொல்லரிதாக
எல்லவர்புகழவே மல்லரிதாகவே சண்

கிருஷ்ணமூர்த்தி சொல் விருத்தம்

வலியசண்டைக்குவந்த மகதமன்னவனே கேளாய்
புலியுமேயெதிர்த்துவந்த பூனைக்கஞ்சு வதுமுண்டோ
நலியவேசெய்துஉன்னை நலமானகாளிகைக்கு
பலியதுதருவேனெந்தன் பலத்தைநீயறிகுவாயே.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அடா வாடா சராசந்தனே சற்றும் பயமில்லாமல் வலிய சண்டைக்கு வந்தாயல்லவா புலியானது பூனைக்கஞ்சுமா அதுபோல் உன்னை சற்று நேரத்தில் காளிகா தேவிக்குப் பலி கொடுக்க வந்தேன் எனது வல்லமையைப் பாரடா சரா சந்தனே.

சராசந்தனுக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் யுத்த தரு

சரா மக்கள்தவிக்கஞ்சனை மடித்தாய் அடாயாதவகிருஷ்ணே
மிக்கவயிரம் முடிக்கவந்தேனே அடாயாதவகிருஷ்ணே

கிரு வந்தேனென்று வலுமைபேசுராய் அடாசராசந்தனே
உந்தனைச்சும்மா விடுவதேதடா அடாசராசந்தனே

சரா ஏதுயென்னிடம்வீரியமறியாமல் அடாயாதவகிருஷ்ணே
மாதுதவிக்க மருகனைமடித்தாய் அடாயாதவகிருஷ்ணே

கிரு மடிந்தமருகன் தன்னைப்போலவே அடாசராசந்தனே
முடிந்ததோவிதி வந்துமடியவே அடாசராசந்தனே

சரா மடிக்கவந்தேனே வலுவைப்பாரடா அடாயாதவ
கிருஷ்ணே
வெடிக்கஅண்டமும்வில்லைவளைத்தேனே அடாயாதவ
கிருஷ்ணே

கிரு வளைத்தேன்வில்லென்று வந்துபதைக்குராய் அடா
சராசந்தனே
க்ஷணத்தில்மடியக் காலம்வந்ததோ அடாசராசந்தனே

சரா காலருத்திரன் போலேமீறியே அடாயாதவகிருஷ்ண
களங்கமில்லாமல்சரங்களெடுத்தேனே அடாயாதவ
கிருஷ்ண

கிரு எடுத்தசரத்தை தடுத்துமீறியே அடாசராசந்தனே
விடுத்தேனேசரம்வில்லைப்பூட்டியே அடாசராசந்தனே

சராசந்தன் சொல் கவி

பூதகன்சகடாசூரன் புகழ்பெருமலம்பன்வல்ல
சாதகனுனகேசி தளங்களைமடித்தோமென்று
பேதகக்கெருவத்தாலே பெரும்பிழைசெய்தாயுன்னை
காதகமாயிந்தக் கணைக்கிறைதருகுவேனே.

சராசந்தன் சொல் வசனம்

அடா வாடா யாதவகிருஷ்ண பூதகன் சகடாசூரன் தேனுகாசூரன் கேசி முதலான அற்ப பலமுடையவர்களை கொன்றோமென்கிற கர்வத்தினாலே என் மருமகனை கம்ச மகாராஜனை கொன்ற உன்னை இந்த பாணத்துக் கிறையிடு வேன் பாரடா கிருஷ்ண.

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

அலைகடலருந்தும்வல்லோன் வன்பனிக்கிளைப்பதுண்டோ
மலையெடுத்தாட்டும்வீரன் மண்கட்டிக்கஞ்சுவானோ
கொலைபுரிவல்லோர்தம்மைக் கொன்றவனென்றெண்ணமல்
தலைதுள்ளிப்போகவேண்டாம் சராசந்தாபிழைத்திடாயே.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அடா வாடா சராசந்தனே அலைபொருந்திய சமுத்திர ஜலத்தையெல்லாம் உண்ணப்பட்டவனுக்கு பனிநீரானது ஒரு பெரிதாகுமோ மலைகளை யெடுத்து ஆட்டும் வீரன் மண் கட்டிக் கஞ்சுவானோ அதுபோல மகா வலிமை பொருந்திய பலசாலிகளான அனேக வீரர்களைக் கண்டிருப்பேன் பிள் ளாய் சராசந்தனே.

சராசந்தன் சொல் தரு

எண்டிசைபுகழுந்தீரனே ஓ கிருஷ்ணதேவா
ஏளிதம்பேசாதே நில்லடா
அண்டிப்பிழையென்றுசொன்ன ஆணவமறிய
வேண்டி

சுரு ஆட்டிஅகோரசரம் பூட்டியுந்தனையிப்போ
அந்தரத்தேவர்கள்காணபிந்தியே யோடவாட்டு
வேன் என்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வல்லவநானென்றுகூறியே சராசந்தனே
மதத்துப்பேசுரு யென்னடா
பையலேகணையினுல் படையெல்லாமடியவே

சுரு பாராயுந்தனையிரு கூருய்க்கண்டித்துவிட்டேன்
சீராய்பாணத்தைவிட்ட கூரையறிந்துக்
கொள்ளும் வல்ல

சராசந்தன் சொல் தரு

விட்டபாணம் தன்னைவாட்டியே ஓ கிருஷ்ணதேவா
வீரியசரங்கள் பூட்டியே
கொட்டமிடும்படைகளெல்லாம் கும்புகும்பலாய்மடிய

சுரு கொல்லும்வுந்தனையிப்போ வெல்லும்படிக்குபாணம்
கோடிகோடியாய்விட்டேன் ஓடிப்போகாமல்
நில்லும் விட்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

தீரங்களறிவேன் நில்லடா சராசந்தனே
தேசதேசமெங்கும் நடுங்க
சாரங்கத்தனுவிலஸ்திரம் சற்றுமிதமில்லாமல்

சுரு தாவியேயுந்தன்மீதில் ஏவியிப்பவேவுன்னை
கூவசண்டனுக்கிறை கொடுப்பேன்உன்னையும்
நானே தீர

சராசந்தன் சொல் கவி

மன்னியகிருஷ்ணதேவா மகாதேவநீயென்ருலும்
என்னைநீவெல்லப்போமோ இளைத்திடவாட்டுவேனுன்

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

தன்னிலையறிந்திடாத சராசந்தப்பயலேகேளாய்
உன்னைநான்வெற்றிசெய்ய ஒருபெரிதல்லகண்டாய்

சராசந்தன் சொல் வசனம்

கேளாய் கிருஷ்ணதேவனே! நீயே மகாதேவ னென்ருலும் என்னை ஜெயிக்க உன்னுலாகாது உன்னை நொடிப் பொழுதிலே எமபுரம் சேரும்படி அடிக்கிறேன் பாரும் கிருஷ்ணதேவனே.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அடா வாடா சராசந்தனே! உன்னை வெல்லுவது எனக்கொரு பெரிதல்ல பாரடா சராசந்தனே.

சராசந்தன் சொல் தரு

வெற்றிசெய்வேனென்று தத்திக்குதித்துமே
வீணனவீரியம் பேசாதே
மத்திபவீரரைப் பற்றிக்கொண்டோமென்று
வல்லமையெண்ணியே வீசாதே
சுரு மடியப்பட கொடியக்கணை
வரவிட்டனே புரம்விட்டிட வெற்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

பஞ்சவாளியனென்றாலும் அஞ்சுமேயுலகமெங்கும்
பலமும்நலமுங்கண்டு மீறுதே
அஞ்சாமல்சமர்செய்ய கொஞ்சத்தில்விடுவேனோ
அச்சமில்லாமல்வீரங் கூறுதே
சுரு அதமிட்டிட கெதைவிட்டனே
ஆடும்படை ஓடும்படி பஞ்

சராசந்தன் சொல் தரு

விட்டகெதையதைவாட்டி கெட்டுமுறியவேவோட்டி
வீரப்படையைவீழ அடித்தேனே
வட்டவில்வாங்கியே எட்டுத்திக்குகளஞ்ச
மழைமாரியாகசரம் விடுத்தேனே
சுரு வடிவாய்படை பொடிபட்டிட
வந்தாயினி நொந்தோடவே விட்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

பக்குவமறியாமல் உக்ரவீரங்கொண்ட
படையைநமக்கிறை கொடுத்தேனே
மிக்கக்கோபங்கொண்டு சக்கரம்வாங்கியே
வெற்றிகொள்ளவேண்டி விடுத்தேனே
சுரு முண்டாவுனை துண்டாடியே
அண்டோரெனை கொண்டாடவே பக்கு

சராசந்தன் சொல் கந்தார்த்தம்

உக்ரமாய்கிருஷ்ணதேவர் ஓங்கிஎன்மீதுவிட்ட
சக்கரம்மழுங்கியோட சதுரங்கச்சேனையெல்லாம்
திக்கெல்லாம்முறிந்துவோட திகைத்துவுன்மனதுவாட
கக்கும் அக்கினிபாணத்தை.

சராசந்தன் சொல் தரு

காட்டியேவரவிடுத்தேன் உந்தனைவெல்ல
காட்டியேவரவிடுத்தேன்
காட்டியேவில்லினில் பூட்டியேயுன்மீதில்
ஓட்டினேனுந்தனை வாட்டுரேன்பாராய் காட்டி

கிருஷ்ணமூர்த்தி சொல் கந்தார்த்தம்

காமனையீன்றநாதன் கணையெல்லாமறுத்துமீண்டு
வீமனால்இவனைக்கொல்ல விதிவசமிருக்கும்போது
நாமிவனோடும்மல்லு நடத்திடலாகாதென்று
பூமியோர்துதிக்கும் கிருஷ்ணர்.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

புறங்கொடுத்தேகினரே மூவாறுதரம்
புறங்கொடுத்தேகினரே
புறங்கொடுத்தேகினர் வரங்கொடுத்திடுபவர்
திறங்கொடுத்திடுமன்னன் புறங்கொடுத்திடலானான் புறங்

பொது வசனம்

இவ்விதமாக சராசந்தனும் கிருஷ்ணமூர்த்தியும் மூன்று வருஷம் வரையில் யுத்தம் செய்து கிருஷ்ணமூர்த்தியானவர் சராசந்தனிடத்தில் பதினெட்டுதரம் தோர்வையடைந்து இவனை நாம் ஜயிக்கமாட்டோம் வீமனாலே கொல்லும்படி விதிவிசமிருக்க நாமெதிர்க்கக் கூடாதென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் புறங் கொடுத்தவர்போல் மறைந்து வடமதுரையை விட்டு மேற்கடல் சூழ்ந்த ஒரு தீவில் மூன்று யோசனை தூரம் துவாரகாபுரியென்று பட்டணம் ஏற்படுத்திக்கொண்டு சேனை சைனியத்துடனே கிருஷ்ணமூர்த்தி வசித்திருந்தார். அப்பால் சராசந்தன் படையுடனே ஜயபேரிகை யடித்துக்கொண்டு தனது தேசம் நடக்கிற விதங் காண்க.

சராசந்தன் தன்னகரம்போகும் தரு

பட்டணம்நாடியே நடப்போம் பேரிகைபாட
பரிவானமந்திரி மார்களே
விட்டேன் கிஷ்டன்மேல்சண்டை வெல்லவல்லமை
யில்லாத
மட்டவீரரையெதிர்க்க வல்லவர்க்குநீதியல்ல பட்

மூவருஷக்காலம்சண்டை மூவாறுதரம்புரிந்தால்
மேவுவதினியெப்படி வெஞ்சினம்தனைமுடிக்க பட்

மாயகிருஷ்ணன்மிகவஞ்சி வ்ாடியேபதுங்கும்போது
ஞாயமல்லவேயினிமேல் நாமவன்தனையெதிர்க்க பட்

வெற்றிசங்கம்ஜயபேரி வெடிமுரசுநடனபேரி
சுற்றிலுமுழங்கிடவே சூழ்ந்துமேபடைகளிக்க பட்

சராசந்தன் சொல் கவி

வரைபுகழ்மந்திரிமாரே மகிழ்ச்சிகொண்டரசுசெய்தோம்
நரமேகயாகத்தாலே நாடெல்லாங்கிடைக்குமென்று
மறைமுனியுரைத்தவுண்மை வாக்கியப்படிநடக்க
தரைமன்னர்தன்னைபிடிக்க சடுக்கெனயேகுவோமே.

சராசந்தன் சொல் வசனம்

அகோ கேளுங்கள் மந்திரிமார்களே! கிருஷ்ண தேவனை ஜெயித்து மனங்களித்து மகததேசத்தை பரிபாலனம் செய்து வருகிறோம். முன்னாலே இந்த பூமண்டலத்தையெல்லாம் அரசாளுவா யென்றும் சண்டக்கௌசிகர் நரமேதயாகம் செய்யும்படி அதனுடைய விதி முறைகளையும் கூறிப்போனாராதலால் இந்த யாகத்துக்கு முன்னூற்று அறுபது இராஜாக்களை பலி தரவேண்டும் அதற்காக தேச தேசத்து இராஜாக்களை பிடிக்கும்படி திக்குவிஜயம் செய்ய நடப்போம் வாருங்கள் தம்பிமார்களே.

சராசந்தன் திக்குவிஜயம் செய்யும் தரு

திக்குவிஜயம்செய்ய சீர்பணியலங்கரித்து
உக்ரவீரதீரன்கூடவே சராசந்தராஜன்
தேசமெங்கும் நடுங்கவந்தானே
முத்துக்குடைதான்கவிய முரசும்பேரிபாட

வெற்றிக்கொடியோங்கிவீசவே சராசந்தராஜன்
வீரியத்துடனே வந்தானே
ஆரமணிமாலையாட அம்புவில்லும்கையிலேந்தி
சூரதேசம்தன்னை நாடியே சராசந்தராஜன்
சுருக்குடனே வந்து மேவினர்

## பொது வசனம்

இவ்விதமாக சராசந்தன் சூரதேசம் வந்து ரணபேரி பறைய அதை அறியும்படி சூரசேனமகாராஜன் கொலுவுக்கு வருகிற விதங்காண்க.

## சூரசேனன் வருகிற தரு

அளவிலாப்படைநெருங்க அருவைசாமரைகள்வீச
தளபதிமந்திரிமார்கள் தன்னெதிர்வணங்கிநிற்க
உளமதுகடுத்துவந்த உச்சிதமறியவேண்டி
வளமிகுசூரசேன மகபதிவருகின்றனே.

## சூரசேனன் வருகிற தரு

சூரசேனராஜன் வந்தான் வெகு உக்ரகுணபதி
சூரசேனராஜன் வந்தான்

சூரசேனராஜன் வீரசூரர் தானடுங்க
ஆரபாரமுடன்சேனை அணியணியாய் சூழ்ந்துவர சூர
அற்புதமாமணி பொற்புள்ளசுயமணி
நற்பெரும் ஒளிமுடி பற்பலர் சூழவே சூர
மண்டலத் தரசரெல்லாம் வந்தடிபணியுந்தீரன்
குண்டலம் செவியிலாட கோதையர் சாமரைபோட சுரு
குருகிய சமர்செய்ய வருபவனெவனென
பெருகியசேனையோ டறிகுவேனென்று சூ
வில்லுடன் கேடயம்வாளும் வேலுடன்சூலமுமேந்தி
சல்லரிமுரசுடங்கா டக்கையும் டமரம்பாட திரு
சந்தனகளபமும் விந்தையிலதிவித
சுந்தரமகிபதி இந்திரனென்ன சூர
சூரதேசம் நாடிவந்து தீரமாய் பேரிகைபோடும்
வீரனையிப்பவேயிரு கூறுசெய்வேன் பாருமென்று சுரு

வெற்றிமொழியுடனே சுற்றிலும்படைவர
யெத்திசையும்புகழ் சத்தியதீரன் சூர

சூரசேனன் சொல் கவி

குருதமச்சவர்கள்சூழ கொலுவினிலிருக்கும்போது
மகதபூபதியேயேது வந்தவூர்தன்னை நாடி
ஜெகதலம்நடுங்கமந்திரி சேனைகள்நெருங்கிசூழ
புகழ்மிகுசமர்கள்செய்ய போகலாம்வருகுவீரே.

சூரசேனன் சொல் வசனம்

வாருங்களப்பா மந்திரி படைத்தலைவர்களே! தேசத்தரசர்கள் சூழும்படியாகக் கொலுவிருக்கிறோம். இப்போது மகததேசாதிபதியாகிய சராசந்தன் நமதுபேரில் படையெடுத்து வந்ததாக சொல்லக் கேட்டு மிகுந்த கோபங் கொண்டேன். நாம் பின்னடையாமல் நாலுவகைச் சேனைகளைக் கூட்டிக்கொண்டு சமர் செய்ய நடக்க வாருங்கள் மந்திரிமார்களே. அப்படியே நல்லது போய் வருவோம் மகாராஜனே.

சூரசேனன் யுத்தத்திற்குவரும் தரு

அதிவிதமதி மந்திரி மாரே இப்போ
அமர்செய்யயென்பின்னே வந்திடு வீரே
எதிர்செய்யவந்தவன் தன்னையே ஏகி
இடிபோலேபாணத்தை யேவியேமுன்னை
அவனைபலிகொடுப்பேன் பாரும் ஓடி
அடிப்பேனொடிக்குள்ளே அவனூரும்பேரும்
சிவனென்றாலும் எதிர்யேது மெத்த
சினமீறிப்படையெல்லாம் மடிப்பேனிப்போ
வலியவந்தெதிர்ப்பதோ தீரம் அவன்
மனதில்அச்சமற்று வந்ததோகோரம்
ஒளிமிஞ்சும்ரணபேரி போட நல்ல
உச்சிதமானமுடி வேந்தர்கள்பாட
மணிமுத்துரதமீதில் ஏறி இங்கே
வந்தோமேரணக்களம் மனமெத்ததேறி
கணிதத்திலடங்காத சேனைகள் சூழ
கடுகியேசமர்க்களம் வந்துமேகாண அதி

சூரசேனன் சொல் கவி

சற்றேனும் அச்சமில்லா சராசந்தவரசேகேளாய்
இத்தலமன்னர்க்குள்ளே இருந்தாலும்தீரமிஞ்சி
உத்தமர்வலியவந்து ஒருகாலுமெதிர்ப்பதுண்டோ
பற்றியேபாணத்தாலே பரகதிக்கேற்றுவேனே.

சூரசேனன் சொல் வசனம்

கேளும் சராசந்தனே! இவ்வுலகத்தரசர்க்குள்ளே நீ என்ன வலுமையில் மிகுந்தவனானாலும் வலியவந்து எதிர்ப்பார்களோ நல்லது இந்த பாணத்தினாலே தன்னை பரகதி சேர்க்கிறேன் எதிர்த்து வாடா சராசந்தனே.

சராசந்தன் சொல் யுத்த தரு

வந்துவீரியம்பேசிய சூரசேனனே-அடா
உந்தன்வீரியம் உலகினிலொருவகை காணேனே
ஓங்கியேசரமதை வாங்கிமந்திரம்சொல்லி
தாங்கிவிடுவேன்படை தேங்கித்திகைத்திடவே
மண்டலமெங்குமே அதிர்ந்துவாட
சண்டனுமஞ்சியே பயந்துவோட வந்

சூரசேனன் சொல் தரு

மெத்தசௌரியம் பேசியே சராசந்தனே யுன்னை
கத்திபடைகளை பாணத்துக்கிறைநான் தந்தேனே
சுரு சொரிபெரிகிடவே மீரிசரங்கள்மழை
மாரியாகவேதொட்டு நீருநீராக்கியே
வையகமெங்குமே கண்டுமேயஞ்ச
மெய்யன் என் கணை கொண்டுமேமிஞ்ச எந்

சராசந்தன் சொல் தரு

வல்லமைமிஞ்சியேவிட்ட சரங்களைவாட்டினேன்
கொல்லவேபடைகளை தலைகாட்டாமலோட்டினேன்
சுரு கொண்டேன்கணைக்குக்கணை கண்டேன்
தேவர்நடுங்க
மண்டலத்தோர்களஞ்ச கண்டிக்கசர
மெடுத்தேன்
மட்டில்லாதபடை யோடியொடுங்கிட
விட்டேன்அஸ்திரம் கண்டுநடுங்கிட வல்

## சூரசேனன் சொல் தரு

இப்படிமிஞ்சியே எதிர்த்துவந்ததுயேதடா
ஒப்பில்லாதசவுரியஞ் சொல்வதும்சூதடா
சுரு ஓடியொளியச்சேனை வாடிதவித்திடவே
நாடியுந்தனைக்கொல்ல கோடிசரங்கள்விட்டேன்
நாகலோகமும் தேவரும்வாட
வேகமாகவே வந்தேனேசாட இ

### சராசந்தன் சொல் வசனம்

கேளடா சூரசேனு உனது மனமற மெலிய உன்னையு உலகத்தரசரையும் பிடித்துக் கொண்டுபோய் நான் செய்ய போகிற நரமேத யாகத்திற்கு பலி தரும்படியாக வந் எனது பராக்கிரமத்துக்கு சற்றேனும் ஈடாவையோ உன் னைச் சடுதியில் பிடித்துக் கட்டிக்கொண்டு போகிறேன் இதோ என்னுடைய வல்லமையைப் பாரடா சூரசேனு!

### சூரசேனனுக்கும் சராசந்தனுக்கும் யுத்த தரு

சூர. ஒருகணைமேவியே உருளவுன்படையெல்லாம்
மறுகணையாலுன்னை வாட்டுவேன்பாராய்
சரா. வாட்டுவேனென்றுமே வலுமெத்தப்பேசாதே
காட்டுவேன்வீரியம் கட்டியேபிடிக்க
சூர. பிடிக்கவுன்னுலாமோ பேசாதேவீண்வார்த்தை
மடிக்கவேசரமாரி வரவிட்டேன்பாராய்
சரா. பாரடாகிருஷ்ணனும் பதினெட்டுதரமஞ்ச
வீரியமழிந்தோட விட்டவனுனே
சூர. நானென்றகெர்வத்தை நானேயடக்கிமன்னர்
கோவென்றுகூறவே குறித்தேனேபாணம்
சரா. பாணங்கொண்டாலென்ன படையெல்லாமதம்
நாணங்கொண்டுவாட நான்பிடிப்பேனே [செய்து
சூர. பிடிப்பேனென்றுசொல்லி பலமெத்தப்பேசாதே
முடிப்பேன்பகையையுந்தன் முடிசிதறிடவே
சரா. சிதறிப்படைகளோட சின்னபின்னங்களாக்கி
பதுங்கிப்பிடிக்கவந்த பலசாலிநானே

### சூரசேனன் சொல் கந்தார்த்தம்

பிடிக்கனுன்வந்தேனென்று பலமெத்தப்பேசவேண்டாம்
அடிக்கவும்படைகளெல்லாம் அதோகதியாகவாட்டி
துடிக்கவுமுந்தனெஞ்சம் தூள்பறந்திடவேமீறி
மடிக்கவேதனுவில் பாணம்.

### சூரசேனன் சொல் தரு

வருகுதுபாரும்பாரடா சராசந்தனே
வருகுது பாரும்பாரடா
உருகுதுவுங்கள்மார்பில் ... உம்பர்கண்டுகளிக்க
தருகுதெனக்குவெற்றி . சற்றுநேரம்தன்னில்பாராய் வரு

### சராசந்தன் சொல் கந்தார்த்தம்

அந்திரவானம்பூமி அதிர்ந்திடவில்லைப்பூட்டி
மந்திரதேவரஞ்ச அவனியோர்அரசரஞ்ச
தந்திரமந்தரியஞ்ச சரந்தனைபூட்டிவாட்டி
சந்திரசூரசேனனை.

### சராசந்தன் சொல் தரு

தூதரைவிட்டுக்கட்டினேன் அடாமன்னனே
தூதரைவிட்டுக் கட்டினேன்
மாதராலேயுன்னை மடிக்கவந்தவனென்றும்
சாதகமறியாமல் தலைகீழாய்விழுந்தாயே தூத

### சராசந்தன் சொல் கவி

மட்டிலாவலுமையுள்ள மந்திரியிவனைமெத்த
கட்டியேரதத்தில்கட்டக் கிளம்பியேநகர்கடந்து
அட்டியில்லாமல்குந்தி அரசனைப்பிடிக்கவேண்டும்
தட்டியேரதம்நடத்திக் கடுக்கெனவருகுவாயே.

### சராசந்தன் சொல் வசனம்

அகோ வாரும் மந்திரிமார்களே! இந்த அரசனை ரதத்தில் ஏற்றி கொடிக்கம்பத்தில் பின்கட்டாகக்!கட்டி மகா ஜாக்கிரதையுடனே காவலாக வாருங்கள் இனி குந்திபோஜ ராஜனை வெற்றி செய்யும்படி ரதத்தைத் திருப்புங்கள் வல்லவர்களே,

பொது வசனம்

இவ்விதமாக சூரசேனனைப் பிடித்துக்கொண்டு போகை யில் அவ்வரசன் துயரமுற்று புலம்புகிற விதங் காண்க.

சூரசேனன் புலம்பும் கவி

அய்யய்யோயென்னசெய்வேன் அரிகரிமுகுந்தாய்போற்
வையகந்தன்னையாண்டு மகிழ்ச்சிகொண்டிருந்தேன்பாபி
கையொடுமெய்யும்சோர கட்டியேபிடித்துப்போக
செய்வகையின்னதென்று தெய்வமேயறிகிலேனே.

சூரசேனன் புலம்பல் தரு

ஆதிமூலமேயிந்த வாதனைக்குள்ளானேன்
அவதிப்படவிடுத்தாய் தெய்வமே
பாரோரறியயிந்த தேர்க்காலில்கட்டியென்னை
பங்கப்படவிடுத்தாய் தெய்வமே
தேசத்தரசராகி ராஜராஜர்மதிக்க
சீர்பெற்றிருந்தேனையோ தெய்வமே
மக்கள்மனைவிவாட திக்கில்லாப்பாவியாகி
மடியவிதித்திட்டாயோ தெய்வமே
ஆதிபராபரனே அரிகரியென்னசெய்வேன்
அஷ்டாக்ஷரப்பொருளே தெய்வமே
வீசும்கொன்றைமலர் முடிமெற்கொண்டமெய்யனே
மேவியேகண்பாரும் தெய்வமே
இரண்டுகரந்தனிலே உருண்டக்கடகமிட்டு
இருந்தேன்செல்வீகமாக தெய்வமே

சராசந்தன் சொல் கவி

வாசமாம்நகரப் விட்டு வந்துமேசூரதேசம்
இராஜனைப்பிடித்துக்கொண்டு நானிலமறியகுந்தி
தேசமேயண்டிவந்தோம் தீரனும்வந்தெதிர்க்க
பாசமாய்ப்பேரியோங்க படையெடுத்திருந்திடீரே.

வசனம்

கேளுங்கள் எனது மந்திரிமார்களே! மகததேசம் விட்டு சூரதேசம் நாடி சூரசேனனைப் பிடித்துக் கொண்டு குந்திதேசம் வந்தோம் இவ்விடத்திலிறங்கி குந்திபோஜ

ராஜனும் நம்மை எதிர்த்து வரும்படி ரணபேரி முழக்கி படைகளைத் தயார்செய்து கொண்டிருங்கள் மந்திரிமார்களே.

## பொது வசனம்

இவ்விதமாக சராசந்தன் ரணபேரிகை முழக்கி சண்டைக்கு எத்தனம் செய்திருக்க அப்போது ரணபேரிகை முழங்கும் சத்தங் கேட்டு அதை யறியும்படிக்கு குந்திபோஜ ராஜன் கொலுவிற்கு வருகிற விதங் காண்க.

## குந்திபோஜராஜன் வருகிற கவி

உலகெலாமதிசயிக்க ஒளிமுடிபணிகள்பூண்டு
இலகியமந்திரிமார்கள் இருபுறம்படைநெருங்க
மலரணிகளபம்வீச வரிசிலைப்பலவுந்தாங்கி
நலமிகுகுந்திபோஜ ராஜனும்வருகின்றனே.

## குந்திபோஜராஜன் வருகிற தரு

கோதில்லாமணிமுடி நீதிப்பிரதாபமுள்ள
குந்திபோஜராஜன்வந்தான் அதிசவுரியபுஜபலன் குந்
பாதிமதியணிந்த ஆதிசிவன்பதத்தை சுரு
பக் னியமனதினி லுன்னியமகிபதி
இன்னிலம்புகழ்பெற வர்ணசிரோன்மணி கோதி
இருபுறம்மந்திரிசூழ அருவைசாமரைவீச
ஏந்திரை மாதராடவே
தர்மநெறிதவருத அரசரதிசயிக்க சுரு
தங்கக்கடகமணி செங்கையிலாடவே
எங்குவேபுகழ்பெரும் மங்களகுணபதி கோதி
சல்லரிமுரசபேரி தவண்டைமல்லரிபூரி
தாளம்தம்பூரு பாடவே
வில்லுடன்காட்டாரிவாலா வேலுமுப்புரிசூலமும் சுரு
வெற்றிவிருதுடனே சுற்றிலுங்காவலர்
பக்தியுடனேவர உத்தமதீரன் கோதி
சிந்தையிலச்சமில்லாமல் வந்துபேரியடித்த
சேதியறியவேண்டியே வெகுவீரியதீரன் சிந்

விந்தையுள்ள சேனையெல்லாம் வந்திடவிடையளித்து சூ
வீரியதீரனும் மீரியகொடிமரம்
சூரியன்போலவே தேறினிலேறியே கோத

பொது வசனம்

இந்தப் பிரகாரமாக குந்திபோஜராஜன் கொலுவிருக்கும் போது சராசந்தன் வந்திருக்கும் சேதி தூதுவர்கள் குந்தி போஜனுக்குச் சொல்ல, உடனே கோபம் பிரவேசித்து மந்திரிமார்களைப் பார்த்துச் சொல்லுகிற விதங் காண்க.

குந்திபோஜன் சொல் கவி

திசையெலாம்புகழுமந்திரி தீரனும்மகதமன்னன்
விசையதாய்வெல்லவந்த விதமெலாம்தூதர்சொல்ல
நிசமதைக்கண்டறிந்தோம் நிமிஷத்திலவனைவெல்ல
அசைவிலாப்படையைக்கூட்டி அருஞ்சமர்க்கேகுவோமே

குந்திராஜன் சொல் வசனம்

அகோ கேளுங்கள் மந்திரிமார்களே! மகதபூபதியாகி சராசந்தன் திக்குவிஜயம் செய்து நம்மை ஜயிக்கும்படியா வந்த விதங்களை தூதுவர்களால் கண்டறிந்தோம் இன நாம் சும்மா யிருக்கலாகாது படைகளைத் தயார் செய்து சம ருக்குப் போவோம் மந்திரிமார்களே. அப்படியே நல்லது மகாராஜனே.

குந்திராஜன் சொல் தரு

இப்பவேபடையுடனே ஒப்பில்லா அரசன்தன்னை
எதிர்த்துப்போராடி வெல்லுவேனே
வதைத்துப்போராடி கொல்லுவேனே
விந்தைமன்னவருடன் வந்தவனெதிர்த்திட
வீரியம்படைத்தவன் தானே
பாரில்விஜயம்செய்ய வந்தானே
பாரியரதத்திலேறி வீரியப்படையுடனே
பரமசிவனை நம்பி நடப்பேன்
திறமாக அவனை நான் மடிப்பேன்
ரணபேரிமீட்டியே அணிவரிசைபடைசூழ

நடிரணக்களத்தைக் கண்டேனே
கொடிசிலையுங்கையில் கொண்டேனே இப்

குந்திராஜன் சொல் கவி

மண்டலத்தரசர்தம்மை மகதமன்னவனே நீயும்
தண்டனைசெய்யவந்த தைரியமறியவேண்டி
சண்டனும்முன்னைநாட சதுரங்கப்படையும்வாட
கொண்டனேதனுவில்பாணம் கொல்லவந்தெதிர்த்திட்
[டேனே.

குந்திராஜன் சொல் வசனம்

அகோ கேளும் சராசந்தனே! இந்த பூவுலகத்தரசரை தண்டித்து கைவசம் செய்யும்படி வந்த தைரியத்தை அறியும்படி வந்தேன். இப்பவே உன்னை எமன் தேடவும் சதுரங்கப் படைகளெல்லாம் சாகவும் இதோ என் கைவில்லைப் பூட்டி அனேக அஸ்திரங்களை தொடுத்து விட்டேன் பாரடா சராசந்தனே.

சராசந்தன் சொல் யுத்த தரு

சொல்லாதும்சொல்லித் துடிக்குறாய்உந்தன்
வாயில்வந்ததெல்லாம் படிக்குறாய்
நில்லாதுவுன்வீரம் நிமிஷத்திலுந்தனை
நீட்டிக்கெதையினாலே வாட்டியடிக்கிறேன் சொ

குந்திராஜன் சொல் தரு

திக்குவிஜயம்செய்ததீரனே என்னை
தீண்டியடிக்கவந்த சூரனே
சிக்குப்பட்டமான்போலே திகைத்துநீவாடவே
சிந்துசிந்தாக்குவேன் வந்தப்படைகளெல்லாம் திக்

சராசந்தன் சொல் தரு

புலியைப்பூனைமிஞ்சிவெல்லுமோ அடா
பொங்குமரியயானைக் கொல்லுமே
மேவியேயுனைக்கொண்டு வேள்விக்கிறைகொடுக்க
விந்தைவிஜயம்செய்ய வந்ததைக்காணுவாய் புலி

குந்திராஜன் சொல் தரு

விஜயம்செய்யவந்தபிண்டனே வீரம்
விணுகவேசெய்வேன் தண்டனை

திசையும்புகழும்பல தீரனென்றெண்ணுமல்
சித்துக்காராவுந்தன் வித்தைக்கஞ்சுவதுண்டோ

சராசந்தன் சொல் கவி

வலியவந்தெதிர்த்துநானும் மானிலத்தரசர்தம்மை
நலியவேசிறையில்வைத்து நரமேகயாகத்துக்கு
பலிதரவேண்டிவந்தேன்படையெலாம்நொடியில்வென்
சடுதியிலுன்னைக்கட்டி சம்பிரமாயேகுவேனே.

சராசந்தன் சொல் வசனம்

கேளுமடா குந்திபோஜராஜனே! நானே திக்குவிஜ
செய்து உலகத்தரசரைச் சிறைச்சாலையில் சேரப்பித்து
மேத யாகத்துக்கு பலி தரும்படியாக வந்தேன். இதே
உன் படைகளை நிமைப்பொழுதில் அதஞ்செய்து உன்னை
கட்டிக்கொண்டு போகிறேன் எனது வல்லமையை
பாரடா குந்திராஜனே.

குந்திராஜன் சொல் தரு

மன்னர்தங்களைமடிக்க யெண்ணினாய்ஓசராசந்தனே [வ
அன்னவன்செயலறியப்போகுமோ தந்தானதான-அன்ன

சராசந்தன் சொல் தரு

அறிவதென்னயாகமுடிக்கவே ஓகுந்திபோஜனே
சரிப்படுத்தவேசமர்த்தநானடா தந்தானதான-சரிப்படு

குந்திராஜன் சொல் தரு

சமர்த்திலொன்றும்முடியாதென்றுமே ஓசராசந்தனே
அமைத்தவிதிஅதுபொய்யாகுமோ தந்தானதான-அமைத்

சராசந்தன் சொல் தரு

பொய்யாவீரியதீரனுனடா ஓகுந்திபோஜனே
மெய்யாயுந்தனைசிறையிலடைக்குறேன் தந்தானதான-
மெய்ய

குந்திராஜன் சொல் தரு

சிறையிலடைக்கவுன்னாலாகுமோ ஓசராசந்தனே
தரையும்நடுங்கபாணமீட்டினேன் தந்தானதான-தரையும்

சராசந்தன் சொல் தரு

மீட்டியசரத்தைவாட்டிப்படையெல்லாம் ஓ குந்திராஜனே
ஆட்டியுந்தனைப்பிடிக்குறேன்பாராய் தந்தான தான-ஆட்டி

குந்திராஜன் சொல் தரு

பிடிக்கவந்துமேதுடிக்குமன்னனே ஓ சராசந்தனே
மடிக்கபாணத்தைமுடிக்குறேன்பாராய் தந்தான தான-
மடிக்க

சராசந்தன் சொல் தரு

பாருமென்றுநீகூறும்மன்னனே ஓ குந்திபோஜனே
சாகப்படையைசாடித்தேன்பாராய் தந்தான தான-
சாகப்படை

குந்திராஜன் சொல் கந்தார்த்தம்

மேருவையசைத்திட்டாலும் விண்ணுமண்ணுக்கினுலும்
வாருதிவற்றினுலும் மலையில்பங்கயம்பூர்த்தாலும்
ஆறுமேசெய்யொண்ணுத யாகம்நீமுடிப்பதுண்டோ
கூறியபாணத்தாலே.

குந்திராஜன் சொல் தரு

கொல்லவந்தெதிர்த்தேனே சராசந்தனே
கொல்லவந்தெதிர்த்தேனே சுரு
கொல்லவந்தேனே நல்லதுவுன்னை
வல்லமைப்பேச செல்லுமேவீரம் கொல்

சராசந்தன் சொல் கந்தார்த்தம்

எத்தனை மொழிந்தாலென்ன இளப்பனென்றெண்ணவேண்
பித்தகன்யென்னைமெச்ச பெரும்படைசிதறியோட [டாம்
சற்றேனும் பயமில்லாமல்

சராசந்தன் சொல் தரு

தடுத்துன்னைப்பிடித்தேன் குந்திபோஜனே
தடித்துன்னைப்பிடித்தேன் சுரு
தடுத்துமேதூதரை விடுத்துமேகட்டி
அடுத்துமேயாகம் முடித்திடவேண்டி தடுத்

சராசந்தன் சொல் வசனம்

அகோ வாருங்கள் மந்திரிமார்களே இந்தர ஜனை தே லேற்றி தேர்க்காலில் கட்டி பதனத்துடன் ஜயபேரி முழக் குந்தி தேசம் விட்டு மறுதேசம் நாடி நடவுங்கள் மந்திரிமா களே.

சராசந்தன் சொல் தரு ஆனந்தக்களிப்பு

குந்திதேசம் தன்னைவிட்டுதாண்டி-இந்தக்
குவலயத்தரசர்தமை வெற்றிசெய்யவேண்டி
செந்திருவும்பிச்சைதேசம்தாண்டி-அந்த
சீருடையதேசந்தன்னை ஜெயம்செய்யவேண்டி
கோசலர்குடகுதேசங்கண்டோம்-நல்ல
கொங்கணர்வங்கணர்தம்மை வென்றுகட்டிக்கொண் [டோ
மச்சர்மலாடர்தம்மைப்பற்றி-நல்ல
மதங்கர்மருடர்தம்மை செய்தோமிகவெற்றி
தெலுங்குதேசம் தன்னைவந்துநாடி-வெற்றி
செய்துசிங்களர்சீனர் அஞ்சிபயந்தோட
கலிங்கர்மலிங்கர்மற்றோர்நோக-அவரைக்
கட்டியேபிடித்துக்கொண்டு அப்புறமேபோக
தாரணியில்மன்னவனைத் தேடியெங்கும்
சாலைகிருஷ்ணசாமிதமிழ் தன்னையுங்கொண்டாடி
நாரணிபதத்தையுங்கோரி நடந்தான்-இந்த
நானிலங்கொடிபெறவே வந்துபதிசேர்ந்தான் தானத்
தனகு

சராசந்தன் சொல் தரு ஆனந்தக்களிப்பு

விந்தையானமந்திரி திக்குவிஜயம்செய்துவந்தோம்
மந்தையாகநாமுங்கூட்டி வந்தயிந்தமன்னரை
எந்தநாளோயாகம்செய்ய அந்தநாள்வரைக்குமே
சிந்தைவாடசிறையில்வைத்து வந்துசேதிகூறுவீ

பொது வசனம்

அகோதெப்படி யென்றுல் சராசந்தன் உத்தரவின்படி தான் நரமேதயாகம் செய்யும்பொருட்டு கொண்டுவந்த முன்னூற்று அறுபது இராஜாக்களையும் சிறைச்சாலையில் அடைத்து வைத்திருக்க அந்த அரசர்கள் யாவற்றுளும் சிறையிருந்து கொண்டு புலம்புகிற விதங் காண்க.

### தேசராஜர் சொல் கவி

சங்குசக்கரனேயிந்தத் தரணியையாண்டிருந்தோம்
எங்களைசிறையில்வைத்து இறைகொடுத்திடவேள்விக்கு
பங்கயன்விதித்தவாறே பண்டுசெய்பாவந்தானே
தங்கமாமகுடசோர தலைவிதியாகினேமே.

### தேசத்தரசர்கள் புலம்பல் தரு

இந்தசிறையில்வாடி யிருக்கவும்விதிதானோ ஆதிதேவனே
அந்தணர்பெரியோர்கள் அவர்க்கிடர்
செய்தோமோ ஆதிதேவனே
பூதலந்தனையாண்டு பூரித்துவாழ்ந்தோமே ஆதிதேவனே
இந்தவாதனைக்குள்ளாகி வருத்தப்படவிதித்தாய்
ஆதிதேவனே
உலகத்தரசரெல்லாம்ஒருமிக்கக்கூடியல்லோஆதிதேவனே
இலகொத்தப்பரந்தாமா என்னக்குறைகள்
செய்தோம் ஆதிதேவனே
மனம்வைத்துஎங்களைவந்து ரக்ஷிக்கவேண்டும்
ஆதிதேவனே
ஒப்பில்லாரகுராமா உன்னையல்லால் வேருண்டோ
ஆதிதேவனே

### பொது வசனம்

இவ்விதமாக ராஜராஜர்களெல்லாம் சிறையிலிருந்து கொண்டு இருக்கையில் இந்திரப் பிரஸ்தத்தில் பஞ்சபாண்டவர்கள் கொலுவாக வருகிறவிதங்காண்க.

### தருமராஜன் வருகிற கவி

அடிமிசையில்பலபடைகள் பணிந்துநிற்க
அரிவையர்கள்கவரிதன்பால் மகிழ்ந்தசைக்க
முடிமிசையிலணிமகுடம் பளபளென்ன
முத்துகுடைகவிக்கமன்னர் கரங்குவிக்க
கடிமுரசுபேரிடங்கா டமாரம்போட
காண்டீபம்கெதைசிலைவாள் வல்லயம்வாளேந்தி
படிமிசையில்புகழுமிந்த்ரா புரியைவிட்டு
பாண்டவர்கள்கொலுவாக வருகின்றாரே.

### பாண்டவர்கள் வருகிற தரு

பாரெங்கும்கெடிபெற்ற வீரங்கள்வடிவுற்ற
பஞ்சபாண்டவர்கள்வந்தார் நல்ல
விலையில்லாநவமணி பளபளவென்ன பஞ்

சாரங்கபாணிபாதம் நேரமும்மறவாத
சரசலோலதீரர் வெகுவரிசையானவீரர் சுரு

சருணமென வெகு சிரணவடிவமணி
அருணமுடியுமா பரணவடிவமணி ப

சந்திரக்குலசார்ந்தார் இந்திரநாதர்வேந்தர்
தருமர்மனங்களிக்கவே நல்ல
தம்பிமாரிருபுறம இன்பமதாக தருமர்
அந்தணர்வேதம்பாட அருவைசாமரம்போட
அமரர்பொன்பூபோட மாதர்திமிர்தநாட்டியமாட சுரு

ஆலமுண்டதிரு நீலகண்டர்மகிழ்
சூலிசகோதரன் சீலனைப்போற்றியே பா

தவளக்குடைகவிக்க குவளைக்கொழைசொலிக்க
தரித்தபணிகளாடவே நல்ல
இருபுறம்புயவணிபெற கொளிபரவிய-தரித்த
பவ்ளவயிரமணி பதக்கம்தளதளென்ன
பாரவாளிதுன்ன கையில்வீரவாளிமின்ன சுரு

பரிமளமிகுமலர் நளமிகுபரவிய
நருமுடியரசர்கள் முறைமுறையாய்காண பா

கண்டாமணிகள்கொஞ்ச மண்டலத்தரசரஞ்ச
காண்டீபம்கதையையேந்தியே நல்ல
வல்லயம்வாளுடன் சொல்லரிதாகிய-கா
சண்டமுரசொலிக்க தரளக்கொடைபிடிக்க
சல்லரிகள்பாட வெகுமல்லர்கள்கூட சுரு

தாளபேரிகை காளபூரிகை
மீளுமொலிக்கஅண்டம் கோளமுமெட்டியே பா

தருமர் சொல் கவி

அருமறைபொருளும்வாழ்க அந்தணர்குலமும்வாழ்க
வருமனுநீதிவாழ்க மன்னர்செங்கோலும்வாழ்க
பெருமைசேர்உலகோர்வாழ்க பேதையெங்களைரக்ஷிக்கும்
திருமணிமார்பனை செங்கண்மால்பாதம்போற்றி.

தருமர் சொல் வசனம்

வாருங்களப்பா எனது தம்பிமார்களே! ஆறுவேதம் நான்கு சாஸ்திரம் பதினெண்கலைக்கியானம் தொண்ணூற்றாறு தத்துவங்கள் மனுநீதிமார்க்கம் அரசர்களுடைய அஸ்தத்தில் தாங்கி யிராநின்ற செங்கோல் இப் பூமியின்கண் வசித்திருக்கும் அரசர்கள் குடியானவர்கள் அத்தண்டமான பேரும் சுகம்பெற்று வாழ்கக்கடவது மேலும் எங்கள் ஐவராஜாக்களும் எங்களுக்கு தேவியாகிய பாஞ்சாலியையும் என்னேரமும் இடைவிடாமறப்படிக்கு அவரது உந்திக் கமலத்தில் வைத்து கார்த்து ரட்சித்து வராநின்ற எங்கள் இஷ்டதேவதையாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய திவ்யசொருப பாதாரவிந்த கமலங்களுக்கு சபாவந்தனம்.

தருமர் சொல் தாழிசை தரு

நல்லவீமாவில்விஜயா நகுலசகாதேவரே
சொல்லுமிந்த்ராபுரியிலுள்ள துய்யஆலயங்களும்
வல்லஅந்தணர்கள்செய்யும் மாதர்கற்புநீதியும்
செல்வனேகுடிகள்மேன்மை திங்கள்மூன்றுமாரியும்
அல்லதுகுறைவில்லாமல் அனைவரும்சுபேக்ஷமா

தம்பிமார் சொல் தாழிசை தரு

சொற்பெரியயெங்களண்ணா துய்யபாதம்வந்தனம்
தப்பிதமில்லாமலிந்த தரணியாளும்நீதியால்
செப்புமந்தவிதங்கள்மெத்த தேசதேசமெங்குமே
ஒப்பில்லாததருமத்தாலே ஒருகுறையுமில்லையே

பொது வசனம்

இவ்விதமாக தருமராஜன் மகா நீதிமார்க்கத்தோடு இந்திர பிரஸ்தத்தை அரசாக்ஷி செய்து வரும்போது தருமராஜனைக் காணும்படி திரிலோகசஞ்சாரியாகிய பிரமன் குமாரனென்றும் சொல்லாநின்ற நாரதமகாமுனிவர் தர்மராஜனைக் காணும்படியாக இந்திர பிரஸ்தம் வருகிற விதங் காண்க.

நாரதர் வருகிற கவி

வான்பெருந்தேவலோகம் மதிகுலப்பாண்டுராஜன்
தான்பெருஞ்சேதிகேட்டு தருமருக்குரைக்கவேண்டி

தேன்பெருமலர்கள்சூடி சீருள்ள வீணைமீட்டி
நான்பெருமுகனளித்த நாரதர்வருகின்ருரே.

நாரதர் வருகிற தரு

நாரதமாமுனிவர்வந்தார் தருமர்பக்கல்
நாரதமாமுனி வந்தார்
நாரதமாமுனிவர்வந்தார் நளினவொய்யாரமாக சுரு
நாடிக்கைதனில் வீணைகள்மீட்டியே
பாடியராகமும் இசைதனைக்கூட்டியே நாரத

நிற்கவெண்ணீருபூசி நேராமந்திரம்பேசி
நீண்டசடையிலங்கவே ஒய்யாரமாக நீண்
சிறக்கருத்ருக்ஷம்பூண்டு சிந்தைமிகக்களித்து சுரு
தேசுலாவிய சற்குணலோலன்
வீசுமாமணி வேதனுர்பாலன் நாரத

இரண்டுகரந்தனிலே உருண்டகடகமாட
இச்சையுடனேவந்தாரே தருமர்பக்கல் இச்
மிரண்டப்பார்வையுடனே வேடிக்கைநடைநடந்து சுரு
மேதினில்கூரும் சேதியைமீறி
சூதில்லாமலே சொல்லுபகாரி நாரத

பாதக்குரடசைய பாண்டுராஜன் சேதிகேட்டு
பக்ஷமுடனே நடந்தார் தருமர்பக்கல் பக்ஷ
காதிற்குண்டலமாடி கமண்டலம்கையிலேந்தி சுரு
காவிவேஷ்டியும் சோதிநிறக்கவே
மேவும்ஞானமும் வேதம்சிறக்கவே நாரத

தருமர் சொல் கவி

திரமிகுதம்பிமாரே செய்தவப்பலத்தினுலே
அரமிகும்சபையைநாடி அருமைநாரதருமன்பாய்
வருகிருர்நாமெல்லோரும் மகிழ்ச்சியாயெதிரிற்சென்று
திருவடிதனில்வணங்கி சீக்கிரமாயழைப்போம்வாரீர்.

தருமர் சொல் வசனம்

அகோ வாருங்கள் தம்பிமார்களே! நாம் செய்த தபோ பலத்தினுல் நமது சமுகம் நாடி நாரதமாமுனிவர் வந்திருக்

தின்றபடியினால் நாம் எதிர்சென்று வந்தனம் செய்து அழைத்துக்கொண்டு வருவோம் வாருங்கள் தம்பிமார்களே.

### தருமர் சொல் தரு

முனிநாதரேசருணம் எங்கஊயாளும்
முனிநாதரே சருணம்
முனிநாதரே இந்த மூவுலகம்மதிக்கும்
தனியாமறையுணர்ந்த சதுர்முகனருளிய முனி
இந்ததிரிலோகத்தில் எங்கும்சஞ்சரித்துமே
சிந்தையிலன்பாக எந்தன்சமுகம்வந்த முனி
சங்கரன்மகிழ்குண சாலிவசீகரா
மங்களசுபகரா மகிழ்ச்சியுடனேவந்த முனி
ஆசனந்தன்னிலே அன்பாயெழுந்தருளி
பாசம்வைத்தருள்செய்யும் பரிவாகவந்தசேதி முனி

### நாரதர் சொல் கவி

சுந்தரமன்னவாழி சொல்லுவேன் அஷ்டதிக்கு
இந்திரன்சபையைப்போலே இருக்குதுன்சபையுமப்பா
சந்திரகுலத்தில்வந்த தந்தையாம்பாண்டுராஜன்
மைந்தருங்களுக்குறைத்த வாக்கதையுரைசெய்வேனே.

### நாரதர் சொல் வசனம்

கேளும் தர்மபூபதியே! நீங்களெப்போதும் சுகம் பெற்று வாழ்கக்கடவது எழுந்திருங்கள். நான் உம்மிடம் நாடிவந்த விபர மென்னவென்றால் இன்றையத்தினம் திரிலோகங்களுக்கும் சென்று அஷ்டதிக்கும் சென்று அஷ்டதிக்கு பாலகர் சபையையும் பார்த்து இவ்விடம் வந்து உமது சபையைப் பார்த்ததில் உன் சபையானது தேவேந்திரன் சபையைப்போ லமைந்து இருக்கின்றபடியால் நான் அதிக மகிழ்ச்சி கொண்டேன். அப்படி யிருக்க எமதர்மராஜன் சபையைப் பார்த்து வருகையில் உன் தந்தையாகிய பாண்டு மகாராஜன் எமதண்டனையிலிருந்து கொண்டு உங்களுக்கொரு சங்கதி உரைக்கும்படியாக நம்மை பிரார்த்தித்தார். அதை உம்மிடம் சொல்லும்படியாக வந்தேன் சந்தோஷமாக கேளும் தருமராஜனே.

### தருமர் சொல் வசனம்

ஆனல் அப்படியே சொல்லுமையா சுவாமி நார முனிவரே.

### நாரதர் சொல் தரு

சந்திரகுலபதியே வந்த
சங்கதிசொல்குறேன் கேளுமையா
இந்திரராஜன்சபை தன்னில்
இருக்கின்றஅரிச்சந்திர ராஜனைப்போல்
எமலோகம்தன்னைவிட்டு தெய்வ
இந்திரன்சபைதன்னில் தானிருக்க
அமையும்படிநினைவு கொண்டு
அந்தவிதந்தன்னை உந்தனுடன்
சொன்னரேஉங்கள் தயவாலே
சொர்க்கம்கிடைக்குமென் றக்கரையாய்
மன்னும்உமக்குச்சொல்லு மென்று
மார்க்கத்தைசொல்கிறேன் கேளுமப்பா
ராஜசூயயாகமதுசெய்தால் நாடும்
பரகதிகூட்டு மென்ருர்
பாசமுடனுரைக்கவந்தேன் பக்ஷமாய்
செய்குவீர் இக்ஷணமே

### தருமர் சொல் தரு

தரு நாரதரேநீர்சொன்ன ராஜசூயயாகம்செய்ய
வேதாயதன்விதி விளம்பிடுவீரே
நார அரசர்அரசரெல்லாம் அடங்கிப்பணியவெற்றி
பிரதாக்ஷியவரென்றும் பேர்பெறவேண்டுமே
தரு வரவேணுமென்ருலே மாநிலத்தரசர்தம்மை
பெறவெற்றிதிறமாக பேசவும்போமோ
நார பேசவும்போமோவென்று பிரியமில்லாமல்மனம்
கூசவும்போகுமோ குறைவராதரசே
தரு அரசர்அனேகருண்டு அதிகபலசாலிகள்
பலபலயாகம்செய்ய பெரும்பிழைவருமோ

நார வருமோபிழையுமக்கு வல்லத்தம்பியாம்நால்வர்
துருவம்போலேயிருக்க துயரமேதரசே

தரு துயரமேதுயெனக்கு துணிந்தாலுலகுமன்னர்
வயிரமுண்டாஞலது வருமிடர்நமக்கே

நார இடர்வருமோவுமக்கு இருக்கமாயன்தயவு
துடருவாயாகம்செய்ய துவாரகைபோறேன்

நாரதர் சொல் வசனம்

அகோ கேளும் தருமராஜனே! இந்த பூமண்டலத்தரச ருக்குள் நீங்களந்த யாகத்தை முடிக்க தீரமுண்டு. நீர் யாதொன்றுக்கும் அஞ்சாமல் இந்த யாகஞ் செய்யத் தொடருவீர் நான் துவாரகை போய் வருகிறேன் தரும ராஜனே.

தருமர் சொல் வசனம்

அப்படியே போய் வாரும் சுவாமி நாரதமகா முனிவரே.

தருமர் சொல் வசனம்

ஆகா வாருமப்பா குண்டலீகனே எனது தகப்பனு ராகிய பாண்டுமகாராஜன் சொர்க்கம் சேரும்படியாக இராஜ சூய யாகம் செய்து முடிக்க வேண்டுவதற்காக யோசிக்க வேண்டு மாகையால் தம்பியாகிய வீமசேனனை நானழைத் தேனென் றழைத்துவாரும் குண்டலீகனே.

தருமர் சொல் தேவாரம்

கரியாதிமூலமென்றபோது கடுகிவந்தாதரித்து
அறிவுருவானசோதி அண்ணலேநின்ருள்போற்றி
பரிவுடன் தூபங்காட்டி பணிந்தோமேஅன்புநாட்டி
தெறிதவருமல்யாகம் நிறைவேற்றிரட்சிப்பீரே.

வீமன் வருகிற கவி

கதிர்மணிமகுடமின்ன கடகமும்பளபளென்ன
மதிகுலம்தழைக்கவந்த மணிசித்ரபுகழ்கெம்பீரன்
அதிரதர்அமைச்சர்சூழ அடல்மிகுபுயத்தோனிந்திர
பதிபுகழ்வீமசேனன் பலாட்டியன்வருகின்ருனே.

### வீமன் வருகிற தரு

வீமசேனராஜவீரன் வேடிக்கையுல்லாசமாக
சோமசூரியனைப்போலவே மனங்களித்து
சுந்தரம்போல்வந்து மேவினான்
சுந்தர ஆரம்பளபளென்ன தனிமுடியலங்கரித்து
கந்தமலர்வாடைவீசவே வீமசேனராஜன்
காமனைப்போல்வந்து மேவினான்
ஓசையுள்ளவீரகண்டா மணியும்கலகலென்ன
வாசம்பெருமாலையாடவே வீமசேனராஜன்
வருகிறார்தமையனைக் காணவே
பட்டுசாலுவையிலங்க பதக்கம்தளதளென்னவே
வட்டவில்கெதைவாள் தாங்கியே வீமசேனன்
மனமகிழ்ச்சியாக வாரேனே
கட்டுங்காவல்தன்னை தாண்டி கடகம்பளபளென்ன
பட்டவர்த்தனர்கள்சூழவே வீமசேனராஜன்

### வீமன் சொல் வசனம்

சருணம் சருணம் எனது அண்ணாவே அடியேனை யழைப்பித்த காரணம் இன்னதென்று தெரியும்படி சொல்ல வேண்டும் அண்ணாவே.

### தருமர் சொல் வசனம்

கேளும் தம்பி வீமசேன மகாராஜனே! நீ வந்தேயாகில் மகாராஜனாக தீர்க்காயுசு பெற்று வாழக்கடவது எழுந்திரும் உன்னை அழைத்த விபரம் இன்னதென்று தெரியும் படியாக சொல்லுகிறேன் தம்பி வீமசேனா.

### தருமர் சொல் தரு

அதிபலவீமா அர்ச்சுனாகாமா
அருமைநகுலசகா தேவர்களே
மதிகுலத்தந்தை மகிழ்ந்திடசிந்தை சுரு
வருந்திசெய்திடா மைந்தருமேதுக்கு
தெரிந்துகூறுங்கள் முனிவர்செய்வாதுக்கு அதி

### வீமன் சொல் தரு

சுந்திர அண்ணு சுடர்முடிவண்ணு
துயரப்படும்விதத்தை அறியேனே
சிந்தையில்நினைக்க செய்ததைமுடிக்க சுரு
சீருள்ள தம்பிமார் நாங்களிருக்கவே
நீருள்ளம்வாடுவ தேதுபெருக்கவே சுந்

### தருமர் சொல் தரு

எங்குமேயறிய எதிர்த்துபோர்புரிய
எவ்விதமுடியுமோ அறியேனே
பங்கமுண்டாமோ பலன்கீர்த்திபோமே சுரு
பக்ஷமில்லாமன மெப்படிதணிவேன்
இஷ்டமாகிசெய்ய எப்படிதணிவேன் எங்

### வீமன் சொல் தரு

தந்தைதன் துயரை தவிர்க்காமலுயிரை
தான்வைத்திருக்கமன்னர் பெரிதாமோ
சிந்தையில்பெரிதாய் ஜெகமன்னர்அரிதாய் சுரு
செப்பவும்போகுமோ ஒப்பில்லாமாயவன்
எப்பவும்துணையுண்டு தப்பிதமேது தந்

### வீமன் சொல் வசனம்

கேளும் எனது தமையனாரே நமது தந்தையாகிய பாண்டுராஜன் சொர்க்கம் சேரும் பொருட்டு ராஜசூய யாகம் செய்து முடிப்பதற்கு தடையென்ன யிருப்பது நமது இஷ்ட தேவதையாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை அழைப்பித்து அவருடன் இந்த விஷயங்களைச் சொல்லி எவ்விதமாவது ராஜசூய யாகத்தைச் செய்து முடிப்பதுதான் நலமாக இருக்கின்றது அண்ணுவே.

### தருமர் சொல் கவி

மண்டலம்புகழும்தம்பி மார்களேயுலகமெல்லாம்
உண்டவர்தம்மையன்றி ஒருவிதமுடிக்கப்போமோ
குண்டலிகனே நீவாடா குறுகிதுவாரகைக்குச்சென்று
கண்டந்தகிருஷ்ணமூர்த்தியை கடுகென அழைத்து
வாராய்.

### தருமர் சொல் வசனம்

வாருங்கள் தம்பிமார்களே உலகமெல்லாம் உண்டருளிய பகவானையன்றி வேருெரு காரியம் முடிக்க போமோ வாருமப்பா குண்டலீகனே நீ துவாரகாபுரிக்குச் சென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைக் கண்டு நாம் அழைத்தோமென்று அழைத்து வாருமப்பா குண்டலீகனே.

### பொது வசனம்

அப்போது கிருஷ்ணமூர்த்தியானவர் துவாரகாபுரியை விட்டுத் தருமராஜனைக் காணும்படியாக இந்திரப்பிரஸ்தம் வருகிற விதங் காண்க.

### கிருஷ்ணமூர்த்தி வருகிற கவி

நாரதமுனிவர்வந்து நானிலத்தரசரெல்லாம்
தீரமாய்மகதமன்னன் சிறைவைத்தசேதிதன்னை
கூறவுங்குண்டலீகன் கொற்றவர்சேதிசொல்ல
தேறவேமாயகிருஷ்ண தேவரும்வருகின்ருரே.

### கிருஷ்ணமூர்த்தி வருகிற வசனம்

இவ்விதமாக நாரதமகாமுனிவர் துவாரகாபுரிக்குச் சென்று ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியைக் கண்டு சராசந்தன் தேசத்தரசர்களைப் பிடித்துக்கொண்டு வந்து சிறையில் வைத்திருக்கும் சேதியைத் தெரிவித்துப் போக மறுபடியும் குண்டலீகனை விட்டு தருமராஜன் கிருஷ்ணமூர்த்தியை அழைக்க அப்போது கிருஷ்ணமூர்த்தியானவர் கெருடவாகனருடராய் தருமராஜனைக் காணும்படியாக இந்திரபிரஸ்தம் வருகிற விதங் காண்க.

### கிருஷ்ணமூர்த்தி வருகிற தரு

கெருடவாகனமேறி
புருஷரத்தினமென்னவே
பொங்கமுடன்வந்து
கதைசிலைவாளிதண்டம்
சாரங்கபாணி
மேவினர்
எட்டுதிக்கும்மன்னர்போற்ற
பட்டுபீதாம்பரமின்னவே
பக்ஷமாகவந்து
இன்பமாயிசைகள்பாடி
சாரங்கபாணி
மேவினர்

அம்புவிமன்னர் நடுங்க யாகம்செய்துதான்முடிக்க
இன்பங்கொண்டைவர்களிக்கவே சாரங்கபாணி
இமையவர்துதிக்க வந்தாரே
கோலியனூர்மேல்நகர் சாலகிருஷ்ணதாசன்போற்றும்
மாலிதிரிசூலிசோதரன் சாரங்கபாணி
மன்னவர்கள்முன்னே வந்தாரே கெருடவாகன

பொது வசனம்

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தியானவர் வந்த மாத்திரத்தில் தருமராஜர் முதல் தம்பிமார்களுடன் கிருஷ்ணமூர்த்தியைக் கண்டு துதி செய்கிற விதங் காண்க.

தருமர் சொல் கந்தார்த்தம்

வாடியபயிர்கள் நல்ல மழையைக்கண்டதுபோலும்
தேடியபொருளுங்கையில் சிக்கினவிதங்கள்போலும்
ஓடிதத்தளிக்கும்நீரில் ஒருதெர்ப்பைகண்டாற்போலும்
நாடியேமுன்பு வந்தார்.

தருமர் சொல் தரு

நாதாசருணம்சதுர்மறை வேதாசருணம்
மாதாபிதாகுருதெய்வம் உன்னையன்றி
ஆதாரம்வேறுண்டோ அய்யனேமெய்யனே நா

தருமர் சொல் வசனம்

கேளுமையா சுவாமி பகவானே தங்களுடைய திவ்ய பொற்பாத கமலங்களுக்கு நாங்களைந்துபேரும் வந்தனம் வந்தனமையா சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி சொல் கந்தார்த்தம்

பரிதியெதிரகப்பட்ட பனியைப்போலும்
பார்மதியைக்கண்டதொரு இருளைப்போலும்
சுரிதிமறைக்கண்டவர்கள் பாவம்போலும்
சோதிமுடி அசுரர்களே யுங்களுக்கு
கருதியதீவினை பறந்து ஓடியென்றும்
கடைத்தேறியுலகமெங்கும் கீர்த்தியோங்க
உறுதிதவராமலிந்த உலகையாள்வீர்.

## கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

உத்தமமாவாழ்வீர் ஜெயமுங்கீர்த்தி
பெற்றுமே வாழ்வீர்
பக்தியாகநம்மை பாங்காய்வரவழைத்தீர்
சத்தியவாசரே சங்கதியறிவிப்பீர் உத்

## கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அகோ வாருங்கள் எனது மைத்துனமார்களாகிய பஞ்ச பாண்டவர்களே நீங்கள் என்ன கஷ்டம் வந்தாலும் தீர்க்காயுசு பெற்று வாழக்கடவது எழுந்திருங்கள் துவாரகாபுரியிலிருந்து என்னை ஏது காரணமாக வரவழைத்தீர் சொல்லும் தருமராஜனே.

## தருமர் சொல் கவி

நற்கெதிக்கிடமில்லாமல் நமன்பதிதனிலிருந்து
சொர்க்கமேசேரவேண்டி சொல்லிராசசூயயாகம்
பக்குவமைந்தர்செய்தால் பரகதியடைவேனென்று
மிக்கநாரதர்க்குச்சொல்லி விளம்பினதறிகுவீரே.

## தருமர் சொல் வசனம்

கேளுமையா சுவாமி பகவானே தங்களை யழைப்பித்த விபரம் என்னவென்றால் என் தந்தையாகிய பாண்டு மகாராஜன் எமன் சபையில் இருந்துகொண்டு நாரதபகவானைக் கண்டு என் பிள்ளைகளிடம் சொல்லி இராசசூயயாகம் செய்து முடிக்கச் சொன்னால் அவர் எமகிரியை விட்டு அரிச்சந்திரனைப்போலே இந்திரன் சபையில் விளங்கி யிருப்பேனென்றும் நாரதரிடத்தில் என் தகப்பனாராகிய பாண்டு மகாராஜன் விண்ணப்பஞ் செய்து கொண்டாராம் நாரத பகவான் வந்து இந்த சேதியை என்னிடம் சொன்னார். ஆதலால் எங்கள் தந்தையானவர் நற்கதி யடையும் பொருட்டு இராசசூயயாகம் செய்வதற்கு ஆலோசனை செய்யும்படி உம்மை அழைப்பித்தோமையா சுவாமி கிருஷ்ணமூர்த்தியே.

## கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

ராசசூயயாகமென்றால் பேசவும்யெளிதல்ல
ராஜனேகேளுமப்பா தருமபூபா ராஜ

தேசதேசங்களேகி ஜெயித்திடஅரசரை
ஜெயமுண்டுபிரதாட்சி நயம்பெறவேண்டுமே ராஜ
திரிமூர்த்தியெவராலும் அறிதிந்தயாகஞ்செய்ய
சிந்தைதுணிவதெப்படி தருப்பூபா சிந்
அருமைமன்னவரெல்லாம் அடக்கவேண்டுமேமுந்தி
ஆகுமோவுன்கையால் சேவகம்செலுத்தவும் ராஜ
லக்கமில்லாமலே பொக்கிஷத்திரவியம்
ரத்தினவகைகள்செல்லுமே அளவில்லாத ரத்
தக்கவைவரப்போமோ சார்ந்தவர்வீரங்கண்டு
எப்படி ஜயிக்கலாம்சொல் தருமபூபா எப்
திடமானசராசந்தன் சிசுபாலனுடன்மன்னர்
தெய்வமும்அவனிட கைவசமாயிருக்கும் ராஜ

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

சசிகுலதருமபூபா சராசந்தராஜனுக்கு
சிசுபாலன்முதலாயுள்ள தேசபூபதியைத்தன்கை
வசமாக்கியிருக்குமந்த வல்லவன்தனைமடித்தால்
பிசகிலாயிந்தயாகம் பிரியமாய்நடத்தலாமே.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அகோ கேளும் தர்மபூபதியே மகததேசாதிபதியான சராசந்தனுக்கு மருமகனாகிய கஞ்சனைக் கொன்றேனென்று என்பேரில் அவன் படை யெடுத்து உயுத்தியத்திற்கு வந்தான். நானும் சராசந்தனும் மூன்று வருஷம் போர் புரிந்து அவனை ஜெயிக்க என்னாலாகாமல் பதினெட்டுதரம் முதுகாட்டி தோர்வை யடைந்து ஓடிப்போனேன். அதை சராசந்தனுக்கு சிசுபாலன் தோழனாகவும் இன்னம் அனேக மன்னர்களை தன் கைவசம் செய்துகொண்டு அன்று முதல் இது வரையில் அவன் எனக்குப் பகைவந்தவனா யிருக்கிறான். மேலும் வீமனால் மடியும்படியான விதி யிருக்கிறது அந்த சராசந்தனை முந்தி ஜயமடைந்தால் இந்த யாகம் செய்யத் துணியலாம் தர்மராஜனே.

தருமர் சொல் தரு

வல்லசராசந்தனைவெல்ல சுவாமி
வருந்திளப்படி என்றுசொல்ல

அல்லலாகுதேமனம் யாகத்தைநிறைவேற்ற
எல்லாமுந்தனுலாகும் என்மனம்சோதிக்கிறீர் வல்

கிருஷ்ணமூர்த்தி சொல்தரு

மனப்பழுதுகள்சொல்லவில்லே மன்னு
நினைப்புவேறுவதும் தொல்லே
அனுப்பும்தம்பிவீமனை அர்ச்சுனனை என்பின்னுல்
அவனைமடித்துவாரேன் புவனமீடேறவே மன

தருமர் சொல் தரு

ஒப்பில்லாமாயனேகூறும் நான்
எப்படியனுப்புவேன் பாரும்
செப்பவேயுந்தனை ஜெயித்தவல்லவன்மீதில்
சிறுவர்களெதிர்த்திட தருமமோவுமக்குவெற்றி ஒப்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வீமனுல்கொல்லவிதியிருக்க அவனை
ஆமோவொருவராலே அழிக்க
சோமகுலேசனே துணைவரையனுப்பினுல்
சொல்லும் அவனைக்கண்டு வெல்லுவேன்மயங்காதே வீம

தருமர் சொல் கவி

தயகுண கமலநேத்ரா நானிலந்தன்னிலுந்தன்
செயலல்லால்வேறுமுண்டோ தேவனே எங்கள்மீதில்
தயவதுஇருக்கும்போது சற்றுநானஞ்சுவேனே
புஜபலத்தம்பிமாரை பூரிப்பாயனுப்புவேனே.

தருமர் சொல் வசனம்

கேளுமையா சுவாமி கமலநேத்திரா! காருண்ய வஸ்துவே உலகமெங்கும் உம்மிட செயலேயன்றி வேறுண்டோ? தேவரீருக்கு எங்கள் மீதில் பூரண தயவிருப்பதினுல் எனக்கென்ன அச்சமிருக்கின்றது. தேவரீர் மனதின்படி என் தம்பிமாரை அனுப்பிவைக்குறேனையா சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

கேளும் தருமராஜனே! எனக்கென்ன மகா சந்தோஷமாச்சுது சீக்கிரமாக உன் தம்பிமார்களுக்கு உத்திரவு தந்தனுப்பும் மகாராஜனே.

தருமர் சொல் வசனம்

அகோ கேளுங்கள் தம்பிமார்களே! வீமசேனு தம்பி அர்ச்சுனு நமது இஷ்டதேவதையாகிய ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி உடனே சென்று மகததேசாதிபதியாகிய சராசந்தனை ஜெயம் பெற்று வருவீர்கள் போய் வாருங்களப்பா தம்பிமார் களே.

வீமன் சொல் வசனம்

ஆனுல் அப்படியே தங்களுத்தாரப்படிக்குப் போய் வருகிறோம் அண்ணுவே.

வீமன் சொல் வசனம்

அகோ வாருங்களடி பணிப்பெண்களா நீங்கள் அரண் மனைக்குச் சென்று என் தேவியாகிய துரோபதையம்மனை நாமழைத்தோமென்று அதிக சீக்கிரத்தில் அழைத்து வாருங் களடி பெண்களா.

துரோபதை சொல் கவி

மதிகுலம்தழைக்கவந்த மன்னவாமனங்களிக்க
கதிர்மணிபணிகள்மின்ன கதம்பகஸ்தூரிவீச
எதிரில்லாவீமர்காண ஏந்திழைமாதர்சூழ
துதிபெரும்மயிலைப்போலே துரோபதைவருகின்ருளே.

துரோபதை வருகிற தரு

சோதிமதிவதனி ஆதிபராபரி
துரோபதாதேவிவந்தாள் அழகில்மிகுந்த-துரோ
தாதிமார்புடைசூழ தண்டைகிங்கிணிகொஞ்ச சுரு
சம்ரமாமணி மாலைகுலுங்கிட
செம்பொன்மாமணி பணிகள் துலங்கிட சோதி
சிறந்தவுலகமெங்கும் நிறைந்தபரிபூரணி
செல்விதுரோபதையும்வந்தாள் ஒய்யாரமாது-செல்
வரந்தரும்சுபகரி வல்லக்கிருபாகரி சுரு
வன்னிமாரன்யென வந்தசுந்தரி
உன்னதப்பணி ஒளிவுநிரந்தரி சோதி
அன்ன நடையொய்யாரி மின்னலிடைசிங்காரி
அருமைசிகாமணிவந்தாள் உலகில்மிக்க-அரு
கன்னல்மொழியாள் வஞ்சி கூவுங்கிளிபோல்கொஞ்சி சுரு

கமலத்திருநயனன் மாயன்சகோதரி
உலகிலன்பரும் நம்புமாத்ரி சோதி

தங்கச்சரிகைசேலை அங்கம்பளபளென்ன
சத்திதுரோபதையும்வந்தாள் வீமனைக்காண-சத்
செங்கைக்கடகமின்ன சிலம்புகலகலென்ன சுரு

தேசமெங்குமே கண்டுதுதிக்கவும்
பாசமாகவே ஐவர்களிக்கவும் சோதி

துரோபதை சொல் சருணத் தரு

திங்கள்குலசேகரனே மங்களகிருபாகரனே
சீர்பாதம்அடியவள் வந்தனம்
மத்தகெஜதோளனே சுத்தவீரதீரனே
மலரடிக்கடியவள் வந்தனம்
எங்கும்புகழ்மாரனே சிங்காரகெம்பீரனே
உன்னிணையடிக்கடியவள் வந்தனம்
வல்லகெதைக்கையனே சொல்லுமணிதுய்யனே
உன்மலரடிக்கடியவள் வந்தனம்

துரோபதை சொல் கொச்சகம்

மன்னும்புவியாளும் மன்னவர்கள் தான்வணங்க
மின்னுமுடிவதனு வேந்தருக்குவீரியனே
கன்னியரைத்தானேவி கடுகிஇந்தசபையதனில்
என்னையழைத்தவிதம் இன்னதென்றுதானுரைப்பீர்.

துரோபதை சொல் வசனம்

சருணம் சருணம் எனது பிராணவல்லபா அரண்மனையில் இருந்த என்னை அழைப்பித்த விதம் தெரியச் சொல்லும் எனது பிராணேசா.

வீமன் சொல்லும் கொச்சகம்

மானேமடமயிலே வஞ்சியர்க்குரஞ்சிதமே
தேனே அரிகிருஷ்ண தேவருடன்வில்விஜயன்
நானேசராசந்த ராஜருடன்போர்புரிய
தேனேமனதானேம் தருவாய்விடையெனக்கே.

### வீமன் சொல் வசனம்

கேளும் பிராணநாயகி உன்னை அழைத்தது யாதெனில் நானும் அர்ச்சுன மகாராஜனும் உனது தமையனாகிய கிருஷ்ணமூர்த்தியினுடனே சென்று சராசந்தனுடன் போர் புரிந்து அவனை ஜெயித்து வெற்றி பெற வேண்டியபடியால் எங்களுக்கு விடை யளித்தனுப்பும் பிராணநாயகி.

### துரோபதைக்கும் வீமனுக்கும் தர்க்கத் தரு

ராஜனேயென்னசெய்குவேன் இதுநல்லவசனமல்ல
ராஜனேயென்ன செய்குவேன்
வாசவன்தன்னைவென்று வல்லவனென்றுஇந்த
தேசமெங்குமறியும் தீரர்புகழ்கெம்பீரா ராஜ

### வீமன் சொல் தரு

தேவியேவாடலாகுமோ என்தீரமறிந்திருந்தும்
தேவியேவாட லாகுமோ
ஆவிதன்னையேவாட்டி அந்தசராசந்தனை
கூவிநமனுக்கிரை கொடுக்கவீரியமுண்டு தே

### துரோபதை சொல் தரு

நாதனேஎன்னசெய்குவேன் மனம்வாடிப்பதருதையோ
நாதனேஎன்ன செய்குவேன்
மேதினிஎங்கும்திக்கு விஜயம்செய்தவனுமே
ஆதலாலவனையும் அடிக்கவல்லமையுண்டோ நாத

### வீமன் சொல் தரு

நாயகிசொல்வதிப்படி இதுநல்லவசனமல்ல
நாயகிசொல்வ திப்படி
மாயவன்இருக்கவே வருமோஎனக்குத்துன்பம்
சேயிழையேஇப்படி சிந்தைநொந்திடவேண்டாம் நாய

### துரோபதை சொல் கவி

செவ்வியகுணப்ராணேசா ஜெயகிருஷ்ணதேவர்தன்னை
மூவாறுதரம்முறிந்து முதுகிடச்செய்தோன்தன்னை

எவ்வாறுஜெயிப்பதென்றும் ஏங்கினுளிருக்கவும்மை
ஒப்பிஎப்படிபோவென்று உறைத்துநான்மகிழுவேனே.

துரோபதை சொல் வசனம்

அகோ கேளும் பிராணநாயகா! எனது அண்ணு வாகிய கிருஷ்ணமூர்த்தி துணையிருப்பாரென்றும் சொல்ல வந்தீரல்லவா? அந்த கிருஷ்ணமூர்த்தியுடனே சராசந்தன் மூன்றுவருஷம் போர் புரிந்து பதினெட்டுதரம் முறிய அடித்த வல்லவனை நீர் எப்படி ஜெயிக்கப் போகிறீரென்று என் மனம் வாடுகின்றது, நான் எப்படி மனம் வந்து அனுப்புவேன் பிராணநாயகா.

வீமன் துரோபதை தர்க்கம் தரு

பெண்ணேஎன்பெண்மயிலே பெண்ணேரதியே
கண்ணேபாஞ்சாலன்பெற்ற கங்குல்மதியே
பெண்ணேமதிமயங்கி பேசவும்நலந்தானே
இன்றேசராசந்தனை எமபுரிசேர்க்குறேன் சுரு
இப்படிகூறவும் தப்பிதமாகுமோ
ஒப்பியேபோகவே செப்புவாய்நல்மொழி பெண்

துரோபதை சொல் தரு

ராஜராஜர்பணியும் ராஜதீரா
தேசமெங்கும்வணங்கும் செங்கைவீரா
ராஜராஜரைவென்று நாடும்சராசந்தனை
கூசுதேஎன்மனம் கொல்வதெப்படிஎன்று சுரு
கூறியவசனமும் வீரியமாமோ
தேறியேபோவது காரியமேதோ ராஜ

வீமன் சொல் தரு

அன்னநடைமயிலே அன்புரசமே
என்னமொழியுரைத்தாய் இன்பரசமே
அன்னமேஎன்கையாலே ஆடும்சராசந்தனும்
வன்னிசிரோன்மணியே மடியவிதிஇருக்க சுரு
மாயவன்கொல்லவும் ஞாயமுண்டாகுமோ
ஆயன்முனைந்தது ஞாயமாகுமோ அன்ன

### துரோபதை சொல் தரு

ஏன்சிங்கார நாயகா சித்திரரூபா
எங்கும்புகழும்கீர்த்தி பெற்றிடும்பூபா
சிங்கார நாயகா தேசமெங்கும்நடுங்க
மங்காமல்ஜெயம்பெற்ற வல்லவனுச்சுதே சுரு
வந்திடஅபஜெயம் நொந்திடலாகுமோ
அத்தவிதங்களை முந்தியேவாரும் என்

### வீமன் சொல் கந்தார்த்தம்

சத்தியம்துணை இருக்கும் தையல்பாஞ்சாலியேநான்
பக்தியாய்நடதுதர்மம் பரந்தாமனருளிருக்க
எத்திசைகீர்த்தியாக இருக்கும்வல்லமையெனக்கு
வெற்றிக்கு குற்றமுண்டோ.

### வீமன் சொல் தரு

மெல்லியேவாரும் சமர்புரிய
நல்மொழி தாரும்
வல்லஅதிகவீர விஜயன்அர்ச்சுனன்பின்னே
சொல்லியபடி நாங்கள் சுருக்காகப்போகவே மெ

### துரோபதை சொல் கந்தார்த்தம்

மாயவன்கிருபையாலும் மன்னவர்தர்மபூபன்
காமியென்மாமிசெய்த தபோபலத்தருமத்தாலும்
ஞாயமாய்மகததேச ராஜனை ஜெயமடைந்து
தூயனே வருவீரிப்போ.

### துரோபதை சொல் தரு

சுகமாய்போய்வாரும் சமர்புரிய
பகைவன்மேல் நீரும்
சுகமெங்கும்துதிபெற்ற தேவர்மனங்களிக்க
மிகவெற்றி பெற்றுவந்த விஜயபூபனுடனே சுக

### வீமன் சொல் கவி

படையொடுதனித்திடாமல் பலமணியலங்கரித்து
நடைமேவிமனைவிகுந்தி நாங்கள்தருமரைவணங்கி

விடைபெற்றுக்கொண்டுநாங்கள் மெய்யனேமகிழ்ந்துவ
தடையில்லேஇனிநடக்க சம்பிரமாயேகுவோமே. [தோ

வீமன் சொல் வசனம்

கேளுமையா சுவாமி பகவானே! நாங்கள் தாய
மனைவியிடத்தில் விடை பெற்றுக்கொண்டு வந்தோம். பல
பணிகள் அலங்கிர்தராய் வந்தோம். இனி தடையில்லாமல்
நடக்கலாமையா சுவாமி.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அகோ வாரும் ஓய் வீமசேனு! அர்ச்சுன மகாராஜனே
இந்த ராஜவடிவமாக போகக்கூடாது. நாமூவரும் பிராமண
வுருவெடுத்துப் போய் வருவோம் வாருங்களென்று மூவரும்
பிராமண உருவ மெடுத்துக்கொண்டு மகததேசம் நாடி
நடக்கையில் சராசந்தன் தனது இஷ்டதேவதையாகிய சர
தேவிக்கு பூசை செய்கிற விதங் காண்க.

சராசந்தன் சொல் கவி

நாடியேயெனதுமந்திரி நரமேதயாகம்செய்ய
கூடியேமனங்களித்து குறைவில்லாவகையுங்கொண்டு
தேடியேநம்மைக்காக்கும் சீருள்ளசரதேவிக்கு
சூடியமலரும்பூசைச் சுருக்காகச்செய்குவோமே.

சராசந்தன் சொல் வசனம்

கேளுங்கள் எனது மந்திரிமார்களே! நாம் நரமேத
யாகம் செய்யும்படி நமது இஷ்டகுல தேவதையான சர
தேவிக்கு பூசை நடத்தி வருவோம் வாருங்களப்பா மந்திரி
மார்களே.

சராசந்தன் பூஜை தரு

சரதேவி சரதேவி சர்வசமயப் பரிபூரணி நாரணி
அரன்மேவியலோகதயாபரிஅந்தரிசுந்தரிசந்திரசடாதரி சரு

அற்புதபொற்பத நற்பதம்நம்பினேன்
பற்பலர்துதிசெய்யும் தற்பராபரியே சர

அரிவாகினிபரமதயாளி அரனுடைதிராடியகாளிநீ
பரியேரியமாயன்சகோதரிபக்ஷமுடனே ஜகரக்ஷகியாத்ரி சரு

பாவின்குண சாலிவசீகரி
தோலாகதிரி சூலிமாலிநீ சர

சங்குச்சக்ரபாணிபராபரி சருணம்பதநிருணியகருணி
துங்குங்கரமாலிசடாதரி துணைசெய்துமேளனையாண்டருள்
துய்யமனோன்மணி பையரவப்பணி
வையகமருளிய தையல்சிகாமணி சர
நிறைதம்செந்தேனுடன்பரிமளம் சீக்காயுடன்கொய்
இளநீரும்
பலகார்த்தயிர்பாலுடனமுர்தமும் பண்பாயபிஷேகமாடியே
பட்டுடன்பலபணி இட்டுடன்மாமலர்
தொட்டுமேசூடியே விட்டுநிவேதனம் சர

சராசந்தன் சொல் தேவாரம்

சங்கரிகோலாகாலி சதுர்வேதரூபிநீயே
பங்கயத்தரியாள்சூலி பாம்பணிவிமலிநீயே
பொங்கமாயுலகளித்த பூரணவடிவுநீயே
தங்கிமாவடிவமுள்ள சரதேவிநின்றுள்போற்றி.

பொது கவி

தப்பிலாமகதவேந்தன் சரதேவிதனக்கன்பாக
இப்படிபூசைசெய்து இருந்திடும்வேளைதன்னில்
ஒப்பில்லாமாயன்வீமன் ஒளிபெரும்விஜயதீரன்
செப்பமாமறையோராகி சீர்கொலுவருகின்றுரே.

பொது வசனம்

அகோதெப்படி யென்றுல் சராசந்தன் நரமேத யாகம் செய்யும் பொருட்டு தனது குலதேவதையாகிய சரதேவியை பூசை செய்துக் கொண்டிருக்கும்போது கிருஷ்ணமூர்த்தி வீமசேனன் அர்ச்சுனன் இவாள் மூவரும் பிராமண வடிவங் கொண்டு மகததேசம் நாடி வருகிற விதங் காண்க.

பிராமணுள் மூவர் வருகிற தரு

மறையுருவாகிவந்தார் கிருஷ்ணர்வீமன்
வல்லவிஜயன் கூடவே
தரையுள்ளோர் புகழ்ந்தேத்தும் கிருஷ்ணமூர்த்தி
சாரியாகவே நடந்தார்
இந்திராபுரிகடந்தார் திருமூவர்

ஏகிதேசம் துடர்ந்தார்
வந்தார்மகததேசம் கடையிற்புத்தி
மாலேக்கதம்ப மணிந்தார்
பெருமதிலேஇடித்தார் பாசமான
பேரிகையை யடித்தார்
உருமாரியேநடந்தார் காவலர்களே
ஓங்கிக்கன்னத்தி லடித்தார்
வாசனேவீசிடவே தேவர்களெல்லாம்
வாழ்த்தித் துதித்திடவே
பூசனேசெய்யுமன்னன் தன்னேக்காண
பொங்கமுடனேநடந்தார் மறையுருவாகி

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

சுகிபவா சுகிபவா ஆசீர்வாதம் மகாராஜனே.

சராசந்தன் சொல் கவி

பூசனேசெய்யும்போது புத்தியில்லாமல்முந்தி
ஆசீர்வாதங்கள்செய்தீர் அந்தணர்க்குறுதியாகும்
வாசனேமலரெடுத்து வந்துமேபூசைசெய்தேன்
நேசமாயேற்றுக்கொள்ளா நீங்களார் அறிவிப்பீரே.

சராசந்தன் சொல் வசனம்

கேளுங்கள் பிராமணர்களே! நான் சருணம் செய்வ தற்கு முந்தி நீங்கள் என்னே ஆசீர்வதித்த உங்களே கொடிய துஷ்டர்களென்றும் யோசித்து நான் உங்களுக்கு பூஜாவிதி களே நடத்தினேன் அதைப் பெற்றுக்கொள்ளாமல் மதோன் மஸ்தர்களாக இருக்கிறீர்கள் நீங்களார் நம்மிடம் நாடி வந்த தென்ன சொல்லுங்கள் வேதியர்களே.

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

எத்தனேசொன்னுலென்ன எங்கள்தேசத்துவண்மை
குற்றம்நீர்வைக்கவேண்டாம் குலபத்ரமணியேகேளாய்
சத்தியவானேவந்த சங்கதியென்னவென்றுல்
யுத்தபிக்ஷைக்குவந்தோம் யுகந்துமேயறிந்திடாயே.

### கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

கேளும் மகாராஜனே! எங்கள் தேசத்துவண்மை இதுவாகும். நாங்கள் முன்னமே ஆசீர்வாதம் செய்தோமென்று அதற்காக கோபிக்க வேண்டாம். நாங்கள் மூவரும் உம்மிடம் வந்தது ஏது காரணமென்றால் உன் மனது மகிழும்படியாக யுத்த பிட்சை கேட்கும்படி வந்தோமே தவிர வேறில்லை உன் மனது சந்தோஷமாகத் தரவேண்டும் மகாராஜனே.

### சராசந்தன் சொல் தரு

கொடியதுஷ்டரேநீங்க ளாரடாநீங்கள்
கூறும்கூறும்உங்கள் பேரடா
வடிவும்அரசருக்கு வருமோராஜப்பார்வை
வல்லஅகண்டமார்பும் சொல்லும்உருண்டதோளும் கொ

இந்தக்கரத்திலுள்ள காய்ப்படா அது
விந்தைசிலைபிடிக்கும் தேய்ப்படா
அந்தவிரலும்காய்ப்பும் அம்புவிட்டதுமல்லோ
அடுத்துவரவேயிப்போ எடுத்தஉருவமல்லோ கொ

தோளில்அம்புராத் தூணியைமாட்டியே
தொங்கவிட்டதுமல்லோ நாணியை
வாளிகளில்லாமல் வந்துமறையோராகி
வாதுபிக்ஷைகேட்க ஏதுகாரணங்கள் கொ

தீரமழியவந்துவிட்டதோ காலில்
வீரகண்டாமணி பட்டதோ
சாரமுண்டோவந்தால் தரணிமன்னவர்நீங்கள்
சத்தியமாகவே உற்றதைக்கூறுங்கள் கொ

### கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

வருவதுவருமேயென்றும் வராதும்வருவதுண்டோ
அருமைசேர்மகதமன்ன அந்தணரல்லநாங்கள்
தருமருக்கிளையவீமன் தனஞ்சயனிவர்களாகும்
திருவணிஆதிகிருஷ்ண தேவனென்றறிகுவாயே.

### கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

கேளும் சராசந்தனே! வருவதும் வாராது வாராகென்

அதோ நிற்பவன் அர்ச்சுனன் நானே கிருஷ்ணமூர்த்தி உன்பேரில் சமருக்கு வந்தோமடா சராசந்தனே.

சராசந்தனுக்கும் கிருஷ்ணமூர்த்திக்கும் தர்க்கம்

கைகைகொட்டி நகைத்தேனே யாதவகிருஷ்ணு
கண்டுகண்டுபகைத்தேனே
கிரு பகைத்தேனென்றுபேசுகிறாய் சராசந்தனே
பதட்டமாகவீசுறாய்
சரா பதினெட்டுதரம்முறிந்தும் வெட்கமில்லாமல்
படும்வியாதியாலேயறிந்தாய்
கிரு அறிந்தேனென்றுமுடுக்காய் நமனுக்கிறை
அன்பாய்வந்தோமேகொடுக்க
சரா வந்துசிக்கிக்கொண்டீர்களே இன்னமுங்களை
மடிக்காமல்போவதுண்டோ
கிரு துண்டனேவாடாசமர் செய்ய
துள்ளவேண்டாம்போடா
சரா வேணப்படைகளுடனே தேர்க்கரிபரி
வீரம்பெற்றிடவாரேன்
கிரு வாரேனென்றுயேவாடா ஆயுதம்வேண்டாம்
மல்லுத்தம்செய்வோம்வாடா

சராசந்தன் சொல் கவி

அறுமூன்றுதரமுறிந்து கிருஷ்ணுநீயோ
ஆகாதுயென்னைவெல்ல எட்டநில்லு
உருவன்றியென்னைவெல்ல உன்னாலாமோ
உண்மையிதுவில்விஜயா தூரநில்லும்
வருமூன்றுபேர்களுக்குள் வல்லவீமன்
மலைப்புயமும்சொற்பெறவே கேட்டிருப்பென்
திருமூன்றுனேத்திரனும் மகிழ்ந்துமெச்ச
சீக்கிரமாய்தோள்தட்டி வருகுவாயே.

சராசந்தன் சொல் வசனம்

பதினெட்டுதரம் என்னுடன் யுத்தம் செய்து முதுகிட்டோடிய யாதவகிருஷ்ணனே என்னை வெல்ல உன்னு

யாகாது அல்லது உன்னுடனே எதிர்த்து யுத்தம் செய்யத் தகாது. நீ எட்ட நில்லும் இந்த விஸ்விஜயன் என்னுடன் எதிர்த்து உயித்தியம் செய்ய பலமற்றவன் மேலும், எனக்கு இளையவன் உன்னுடன் யுத்தம் செய்யத் தகாது நீ தூர நில்லும். இந்த வீமசேனன் பலாட்டியனென்றும் கேழ்வி புண்டு இவனுடன் எதிர்த்து யுத்தம் செய்ய வேண்டும் அடா வாடா வீமசேனு என்னுடன் சமர் செய்ய பலமுள்ளவனுனல் தோள் தட்டி கெக்கலி கொட்டி வாடா வீமசேனு.

சராசந்தன் வீமன் யுத்த தரு

துடித்தானேவீமனும் மற்புயந்
துள்ளிதட்டியே உள்ளமகிழ்ந்து
அடித்தானேவீமன் அரைக்குள்ளடிபட
அண்டகடாகமும் அதிர்ந்திடவே
அவனையிவனும்விட இவனையவனும்விட
தவநிலைமுனிவரும் எவரும்நடுங்கிட அர

சராசந்தன் சொல் தரு

பதைத்தான்சராசந்தனும் சிந்தை
பாதாளம்பூதாளம் நடுங்கிடவே
சதைத்தானே பூமியில் உயரச்
சண்டனும்எதிர்பட கண்டெதிர்வீமனை
தட்டிதட்டிதோள் கொட்டிபலாட்டியன்
விட்டுவாசியே கட்டியிரண்டு பதை

வீமன் சொல் தரு

வீமசேனனும் வெகுண்டுமீறியே
விடுத்துதோள்தனை மடித்துசாடியே
பூமியெங்குமே அதிர்ந்திடும்படி
பிடித்துசுழட்டியே எடுத்துவீசிட
மோங்கியரணமுக சிங்கம்போலவே
தங்கள்தங்கள்வலு எங்குமேகாண வீம

சராசந்தன் சொல் தரு

கொக்கரித்துமே கெக்கலிகொட்டியே

மிக்கஇந்திரன் உருத்திரனென்னவே
வீரபாஷைகள் கூறி கூறியே
விண்டலங்களும் கண்டோர்திடுக்கிட
கொண்டபுஜங்களும் ரெண்டுமேதட்டிட வெ

வீமன் சொல் கவி

வீரியம் படைத்தோமென்று வேந்தரை யடக்கிவிட்ட
காரியம் செய்யுமுன்னே காலனூர் பதியில்சேர்க்க
மீறியே வந்தெதிர்த்தேன் வேந்தர்கள் யெனைக்கொண்டாட
சூரியன் மறையுமுன்னே துடிக்கவே மடிப்பேன்பாராய்.

வீமன் சொல் வசனம்

அடா வாடா சராசந்தனே! நாம் வீரியம் படைத்தோமென்று இந்த பூமண்டலத்தரசரை யடக்கி பலி கொடுக்க எண்ணங் கொண்ட உன்னை காலனாகிய நமன்பதிக்கு சேர்க்க எண்ணங்கொண்டு வந்தேன். நீ அவனி ஐம்பத்தாறு தேசத்தரசர்களை யெல்லாம் ஜயித்து, வெற்றி யடைந்தோமென்று என்னுடன் எதிர்த்தாயல்லவா? யாவர்களும் என்னைக் கொண்டாடும்படி கதிரேசனாகிய சூரியன் மறையுமுன்னமே உன்னுடலம் துடிதுடிக்கும்படி மடிக்க வந்து எதிர்த்தேன் பாரடா சராசந்தனே.

வீமன் சராசந்தன் யுத்த தரு

அடடாவீமா நில்லடா என்முன்னே
அடிக்குறேன்சுற்றி மடிக்குறேனுன்னை
சுரு அதிரபூமியும்நாண தாண்டிவந்தேனே
பதறியோரறை விடுத்தேன்பாரடா அட

வீமன் சொல் தரு

அடிமேலடியடித்து அதிர்ந்துகால்பிடித்தேனே
அடிபட ஆத்தினூர்போல் கிழித்தேனே
சுரு அண்டரஞ்சவே உன்னைசாடுவேன்
கண்டனே உரு வந்துகூடவே அடி

சராசந்தன் சொல் தரு

கிழித்தஉருவங்கூடி கிளம்பியேவந்தெதிர்த்தேனே
கிட்டிக்காலைவாரி வீசியடித்தேனே

சரு நொந்துபாய்ந்துமே வந்துசாடவும்
உந்தன்தம்பியும் மாயவன்வாடவும் கிழி

வீமன் சொல் தரு

கொல்லவேண்டியுனை பலதரம்கிழிக்கவும்
கூடிகூடியும்வந்து செழிக்கவும்
சரு கொண்டல்மேனியன் துரும்புநீளவும்
கண்டேன்பிளவுகள் மாற்றிக்காட்டவும் கொ

வீமன் வண்ணத் தரு

வந்துவந்து மகதபூபன் வலுமைகாட்டி சாடவே
தந்துகாலை வாரிக்கிழித்து தலப்புமாற்றிப் போடவே
நொந்துசரா சந்தன்மாண்டு நொடியிலண்டம் நாடவே
விந்தைவீமன் தன்னைப்பூமி விண்டலங்கொண் டாடவே.

பொது கவி

மகதமன் னவனைக்கொன்று மகன்சக தேவனுக்கு
விசிதமாய்ப் பட்டங்கட்டி விட்டுமே மன்னர்தம்மை
ஜெகதலம் புகழயெல்லாம் தன்னகர்க் கனுப்பிவைத்து
தகதகென் றழகாய்மூவர் தர்மர்முன் வருகின்றுரே.

பொது வசனம்

இவ்விதமாக சராசந்தனை மடித்து அவன் குமாரனுகிய சகதேவனுக்கு பட்டங் கட்டி வைத்து பூமண்டலத் தரசர்களையும் சிறை விடுவித்து அவாளவாள் பட்டணம் போய் சேரும்படி அனுப்பி விட்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியும், வீமசேனன் அர்ச்சுனன் மூவரும் கூடிக்கொண்டு இந்திர பிரஸ்தம் வருகிற விதங் காண்க.

பொது தரு

இன்பமாகவல்ல வீமனைகொண்டாடி எங்குமே
துதித்திடவே
அன்பாகமூவருங்கூடிச் செயம்பாடி அழகுடனே நடந்தார்
வெற்றிசங்கத்தொனி சுற்றினும்பேரிகை வேதமுழங்கிடவே
சத்தியசந்தனர் தர்மர்களிக்கவே சந்தோஷமாக வந்தவர்
அடிமிசையில்கண்டா மணிகளொலித்திட அரிவையர்
கவரிவீச
வடிவாகரதத்தினி லேறியேமூவரும் மகிழ்ச்சியுடனே
நடந்தார்

அந்தமகததேசம் அடவிவழியைத்தாண்டி அரசர் பணிந்
திடவே
இந்திராபுரிகிட்டிவந்துதர்மரைக்கண்டு இன்பமுடனிருந்தார்

பொது வசனம்

இவ்விதமாக ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி வீமசேனன் அர்ச்சுனன் மூவரும் இந்திர பிரஸ்தம் வந்து தருமராஜனுடன் நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லி யாவரும் சந்தோஷமடைந்த பின்பு இராஜசூய யாகம் செய்யும்படி தேசத்தரசர்களிடம் வேண்டிய திரவியங்களைப் பெற்று வரும்படியாக திக்குவிஜயம் செய்து வரும்படி வீமன் கிழக்குத் திசையும் அர்ச்சுனன் வடக்குத் திசையும் நகுலன் மேற்குத் திசையும் சகதேவன் தெற்குத் திசையும் விஜயம் செய்து வரும்படி பகவானுனவர் கட்டளையிட மூவரும் மூன்று திசையை நாடினுர். அப்போது அர்ச்சுன மகாராஜன் வடக்கு திசை யென்றும் சொல்லானின்ற ருத்திர திசையை நாடி சேனைகள் சூழத் தக்க சபாவாகிய கொலுவுக்கு வருகிற விதங் காண்க

அர்ச்சுனன் திக்குவிஜயம் செய்யும் கவி

அடல்மிகு படைநெருங்க அஞ்சலாய் முரசுபேரி
கடலொளி போலேமீரி காண்டீபம் கரத்திலேந்தி
திடமுடன் ரதத்திலேறி சீர்முடி பணிஜொலிக்க
வடதிசை விஜயஞ்செய்ய வருகின்ருன் விஜயன்தானே

அர்ச்சுனன் திக்குவிஜயம் செய்யப்போகும் தரு

ராஜவிஜயபூபன் வந்தான் வடதிசையதைநோக்கி
ராஜவிஜயபூபன் வந்தான்
ராஜவிஜயன் வந்தான் நவமணிமுடிமின்ன
சுரு நாடும்பரி காலாளுடன்தேரணி
கூடும்மதகரி கொண்டுமேசீரணி ராஜ

தனுவும்பணிநிறக்கவே ரதத்திலேறி
அனுமக்கொடி பறக்கவே
புனுகுசவ்வாதுவீச பூங்கணைமதன்போல
சுரு போடும்பேரி துத்தாரிமுழங்கிட
நாடிமுரசுடன் நாதம்வழங்கிட ராஜ

கண்டமன்னவர்வாடவே அச்சமில்லாமல்
துண்டவீரியர் நாடவே
தண்டைகிண்கிணிவீர கண்டாமணிகளாட
சரு தாளம்பரிரதம் சேனை நடக்கவே
மேவும்அஸ்வமதை கூவிநடத்தவே ராஜ
தவளகுடை கவிக்கவே தேசமன்னர்கள்
எங்கும்கரங்குவிக்கவே
பவளமணிபதக்கம் குவளக்குழைஜொலிக்க
சரு பாசம்பெருகியே மன்னரைவிண்டு
காசினகர்தனை வந்துமேகண்டு ராஜ

பொது வசனம்

இவ்விதமாக அர்ச்சுன மகாராஜன் திக்குவிஜயஞ் செய்து அநேக மன்னரை ஜெயமடைந்து கப்பங்களை பெற்றுக்கொண்டு அவர்களையும் துணையாகக் கூட்டிக்கொண்டு வந்து காசிப்பட்டணம் சேர்ந்து இரணபேரிகை யடிக்கக் காசிப்பட்டணத்தை பரிபாலனம் செய்து வரானின்ற சுரூப மகாராஜன் பேரிகை சத்தங் கேட்டு அதை அறியும்படி கொலுவாக வருகிற விதங் காண்க.

சுரூபராஜன் சொல் கவி

பணிகளு மலங்கரித்து பல ஆயுதங்கள் தாங்கி
துணிவுள்ள மந்திரிசூழ சுந்திர ரதத்திலேறி
அணியணி யாகசேனை அரும்படை நெருங்கிசூழ
மணிமுடி சுரூபனென்னும் மன்னவன் வருகின்றனே.

சூரூபன் வருகிற தரு

காசிக்கதிபனான மாசில்லாகுணபதி
ராஜன்சுரூபன் வந்தான்
மிகவடிவுள்ளசேனைகள் அடவுடன்சூழ
விசியமணிமுடி விளங்கிப்பணிதுலங்க
சரு விந்தைமன்னவர் வீரியம்பேச
சிந்தைதேறியே தீரமுங்கூச காசி
அந்தணர்மறைபாட அருவைசாமரைவீச
சுந்திரமாகவே தோகையரெதிராட

சுரு சூரியன்போலவே மணிமுடிமின்ன
பாரியபுயவணி நிகநிகவென்ன காசி
முத்துக்குடைபிடிக்க முரசுபேரியடிக்க
சுற்றிலுங்காவலரெல்லாம் சூழ்ந்துக்கொண்டேதுடிக்க
சுரு சூலமேந்தியே வீரியங்கூறி
காலில்வண்டயங் கலகலவென்ன காசி
கடுகியிவ்விடம்வந்து முடிகிப்பேரிகைபோட
அடிகிலேகியேகண்டு அவனையிப்பவேசாட
சுரு அச்சமில்லாமலே வீரியங்கூரி
உச்சிதமாகவே தன்மனந்தேரி காசி

சுறுபன் சொல் கவி

வீரிய மனதிலெண்ணிவெகுவிதப் படைகள்சூழ
பேரிகை போடவந்த பிலத்தினை யறிந்திடாமல்
மீரியே வில்வளைத்து மிதமில்லா சரங்களேவி
கூறியபடையைவாட்டிக்கொல்லவந் தெதிர்த்திட்டானே.

சூறுபன் சொல் வசனம்

அடா வாடா விஜயராஜனே! மகா வீரியத்துடனே சேனைகள் சூழ வந்து பேரிகை யடித்தா யல்லவா? உன்னை சும்மா விடுகிறதில்லை நான் வில்லை வளைத்து அநேகம் திவ்யாஸ்திரங்களை மீட்டினேன். அதுவுமன்றியில் உனது சேனைகளைக் கொல்லும்படி வந்தேன் எதிர்த்து வாடா விஜயதீரனே.

அர்ச்சுனன் சொல் தரு

காசிமன்னனேவீரங் காட்டபெதிர்த்தேனே
தேசமெங்கும்மெச்சும் சந்திரகுலபதி
திசையெங்குமஞ்சுமே விஜயனும்நானடா காசி

சுறுபன் சொல் தரு

விஜயதீரனேயெதிர்நின்று வில்லைவளைத்தேனே
சதைசதையாகவே உந்தனைவாட்டவே
சங்கோபசாங்கமாய் பாணங்கள்மீட்டவே விஜ

அர்ச்சுனன் சொல் தரு

பாணமெடுப்பேனே நொடிக்குள்ளே படையைமடிப்பேனே
காணவே என்வீரங் காட்டிநொடிக்குள்ளே
கண்டதுண்டப்பட சண்டப்பிரசண்டமாய் பாண

சுனுபன் சொல் தரு

உக்கிர தீரனே யுலகெங்கும் மிக்கதீரனே
சக்கைசக்கையாக உங்களைவாட்டவே
கண்டனும்யெந்தனைக் கண்டுகொண்டாடவே உக்

அர்ச்சுனன் சொல் கவி

கஞ்சமும் சூழ்பவானி காசிபூபதியே கேளாய்
பஞ்சபாண் டவர்களென்றால் பாரெங்கும் நடுநடுங்கும்
அஞ்சாமல் வந்தெதிர்த்த ஆண்மையை அறியவேண்டி
நஞ்சுகொப்பளிக்கும்பாணம் நானிதோவிடுத்தேன்பாராய்.

அர்ச்சுனன் சொல் வசனம்

கேளும் காசிராஜனே! நீ என்ன இந்த காசிப் பட்டணத்தை அரசாக்ஷி செய்கிறபடியால் நாமே கீர்த்திப் பிரதாபனென்றும் மதிப்பில்லாமல் பேசுகிறாய், என்னுடைய பிரதாபம் என்னவென்றால், பாண்டுமகாராஜன் குமாரர்களாகிய பஞ்சபாண்டவர்களென்றால் இந்த உலகமெங்கும் நடுங்கும். அப்படியிருக்க, என்னுடைய வல்லமையை அறியாமல் வந்து எதிர்த்தாயல்லவா, அதோ உன்னைக் கொல்லும்படியாக நாகாஸ்திர மெடுத்தேன் பாரடா சுனுபராஜனே.

சுனுபன் சொல் கந்தார்த்தம்

அடுத்துமே வந்தெதிர்த்த அர்ச்சுன பதியேகேளாய்
எடுத்திடும் பாணத்திற்கு எதிர்பாணம் நானெடுத்து
தடுத்துமே யுன்னைக்கொல்ல தடைபடா பாணமென்று
விடுத்துமே யுன்னைக் கொல்ல.

சுனுபன் சொல் தரு

வீரங்கொண்டேனே அதிக உக்ர
காரங்கொண்டேனே
தீரமாகவந்து சேவகம்செலுத்தியே
சிலைவிஜயாயுந்தன் தலையையறுக்கவே வீர

## அர்ச்சுனன் சொல் கந்தார்த்தம்

மலைக்கீடாதுரும்புமன்று மாணிக்கத்தனக்கீடாக
நிலைக்குமோமற்றக்கல்லும் நீமெத்தவீரங்கூறி [டேன்
தலைக்கீழாய் விழவேவேண்டாம் சவுரியமெல்லாங்கண்
துலைக்கவே ரதத்தைக்கிட்டி.

அர்ச்சுனன் சொல் தரு

தூண்டிவந்தேனே உந்தனைக்கொல்ல
வேண்டிவந்தேனே
பூண்டக்கவசம்வில்லும் பிரவிரதமழிந்து
பொடிசெய்தேன்படையெல்லா மடியோடேமுரியவே. தூ

சுனபன் சொல் கவி

நல்லமுத்துவிஜயபூபா நம்பினேன்யுந்தன்பாதம்
உலகத்தில்உன்னைவெல்ல ஒருவராலாகாதையா
இலகொத்தமன்னர்மன்று இணையடிஅண்டிவந்தேன்
கலகத்தைவிட்டுயென்னைக் காத்துமேரக்ஷிப்பீரே.

சுனபன் சொல் வசனம்

சருணம் சருணம் அர்ச்சுன மகாராஜனே! இந்த பூமி யின் கண் உம்மை வெல்ல வல்லவருண்டோ அதை நான் அறியாமல் உம்மை எதிர்த்தேன் நான் செய்த பிழையைப் பொருத்து ரக்ஷிப்பது உமது கடமை. வேண்டிய வெகு மானங்களைத் தந்தேன் சந்தோஷமாக எடுப்பித்துக் கொண்டு போய் யாகத்தை நடப்பியும் அர்ச்சுன ராஜனே.

அர்ச்சுனன் சொல் வசனம்

கேளும் சுனபராஜனே! நீ செய்த பிழையைப் பொருத் தேன் நீ தந்த வெகுமதிகளையும் பெற்றுக் கொண்டேன் என் பின்னாலே வாரும் மகாராஜனே.

பொது வசனம்

இவ்விதமாக திக்கு விஜயத்திற்குச் சென்ற வீமசேனன் அர்ச்சுனன் நகுலன் சகாதேவனிவர்கள் நால்வர்களும்

பூமண்டலத்தரசர்களிடம் வேண்டிய திரவியங்களை இனு மாகப் பெற்றுக்கொண்டு இலங்கைக்குச் சென்று பொன் மணி முதலான திரவியங்களையும் விபீஷணரிடம் பெற்றுக் கொண்டு இந்திரப்பிரஸ்தம் வந்து சேர்ந்தார்கள். பிறகு தருமராஜன் ராஜசூயயாகம் செய்யும் பொருட்டு நல்ல சுப தினத்தில் யாகசாலை முதலானதும் ஏற்படுத்தி மாயனை அழைப்பித்து மகா விசித்திரமாகிய மண்டபம் நியமித்து தேசத்தரசர்களை வரும்படியாக திருமுகமனுப்பினர். சகல தேசத்தரசர்களும் வந்து சேர்ந்தார்கள். இப்பால் அஸ்தினு புரத்தை ஆளாநின்ற துரியோதனன் சகுனி கர்னன் தம்பி மார்களும் புடைசூழத் தக்கதாக இந்திரபிரஸ்தம் வருகிற விதங் காண்க.

துரியோதனன் வருகிற கவி

திருமணிசேர்மகுடமுடி பளபளென்ன
தேசமெங்கும்புகழ்படைத்த வல்லதீரன்
அருமையுள்ள தம்பியரும் சகுனிகர்ணன்
அந்தணருங்குருபெரியோர் வீஷ்மாச்சாரி
பெருமையுடன்படைநெருங்க ரதத்திலேறி
பேசரிய அஸ்தினு புரியைவிட்டு
நருமலர்கள்வீசஇந்த்ரா புரியைநாடி
ராஜதுரியோதிரனும் வருகின்ருனே.

துரியன் வருகிற தரு

தேசமெங்கும்வணங்கும் ராஜர்க்கதிபதி
துரியோதனராஜன்வந்தான் நல்லமதிகுலசந்திர துரி
வாசமலர்கள்சூடி கவிவாணர்கள்கூடி
வந்துதுதிகள்பேசி வாசன்போலவே
சுரு வல்லதம்பியர் வருகவருகவே
எல்லையெங்குமே கீர்த்திபெருகவே தேச
சொர்ணக்கவசங்கள் துலங்குமாபரணங்கள்
சோதிப்பெருகிவீசவே நல்லஇருபுரமழகிய சோ
கர்ணன்சகுனிசல்யன் காங்கேயன்வீஷ்மாச்சாரி
கருதுவிர்க்குரு மைந்தனும்கூட
கிருதபற்பனும் வந்துமேநாட தேச

பூரிகைபேரிடங்கா மீறிக்கிடுகிடென்ன
பொங்கும்கடல்போ லொலிக்கவே
வெகுவீரியரொடுங்கிட சூரசூரர்கள்நடுங்க
தாரைசின்னங்கள்பாட தையலெதிராட சுரு
த்திக்காவலர் நத்தியேசூழ
வெற்றிமன்னவர் கண்டிடதாழ தேச
வீடுநகர்கடந்து விந்தைவனம்புகுந்து
வெகுவிததேசம் தாண்டியே
ஓங்கியரவக்கொடி தாங்கிரதத்திலாட
தேடி இந்திராபுரி நாடிகோபுரங்காண சுரு
சிந்தைமகிழ்ந்துமே வந்துமேகாண
விந்தையானபடை வீரியர்தோண தேச

துரியன் சொல் கவி

அருமைசேருலகை ஆண்டிடுமரசே
தருமபூபதியே தாளிணைபோற்றி.

தருமர் சொல் கவி

குருகுலமணியே கொற்றவாவாழி
இருமிந்தமாளிகையில் எல்லோரும்வாழி.

பொது வசனம்

இவ்விதமாக ராஜசூய யாகத்திற்கு தேசமன்னர்களெல்லாம் யாகசாலையில் வந்து நிறைந்திருக்க சோதிப் பட்டணத்து அரசரான சிசுபாலராஜன் இந்திரபிரஸ்தம் வருகிற விதங் காண்க.

சிசுபாலன் வருகிற கவி

அறந்திகழ்தர்மபூபன் யாகமேசெய்யவேண்டி
பறந்துமே தூதர்வந்து பகர்ந்திடும் மொழியைக்கேட்டு
அரைந்திடும் பேரியாட அளவிலாப் படைநெருங்க
சிறந்திடும் சேதிதேச சிசுபாலன் வருகின்றனே.

சிசுபாலன் வருகிற தரு

அந்தமுள்ளயானையேறி அணியணியாய்சேனைசூழ
கந்தமிடுமாலைசூடியே சிசுபாலராஜன்

திரவன்போல் வந்துமேவினுன்
சித்திரக்குடைபிடிக்க சேதிதேசம் தன்னைவிட்டு
அஸ்திஞபுரியைத்தாண்டியே சிசுபாலராஜன்
அழகுடனேவந்து மேவினுன்
சட்டமணிமார்நிறைய சந்திர ஆரம்பளபளென்ன
பட்டவர்த்தனர்கள்சூழவே தீரன்வந்தானே
எமனும் நடுநடுங்க ஏந்தியக்கைவாளுமின்ன
காமசுந்தரனைப்போலவே சிசுபாலராஜன்
கண்டவர்நடுங்க வந்தானே
கண்டசரமாலையாட கதிர்முடி பளபளென்ன
தண்டைவெண்டயங்கள்கொஞ்சவே சிசுபாலராஜன்
தாரணிநடுங்க வந்தானே
இடிமுரசுபேரிடங்கா எத்தாளம்பூரிகைபேரி
வெடிமுழங்கவேந்தர்சூழவே சிசுபாலராஜன்
வீரசூரர்நடுங்க வந்தானே அந்

சிசுபாலன் சொல் கவி

எந்தன்சொற்படிநடக்கும் இசைந்தமந்திரிகாள்கேளீர்
விந்தையாய்தருமர்செய்யும் விளங்கியயாகத்திற்கு
சந்தோஷமாகநானும் சடுக்கெனயேகவேண்டும்
சிந்தனையில்லாமலெந்தன் தேவியையழைத்துவாரீர்.

சிசுபாலன் சொல் வசனம்

வாருங்கள் மந்திரிமார்களே! இந்திர பிரஸ்தத்தை அரசாக்ஷி செய்து வராநின்ற தர்மராஜன் இராஜசூயயாகம் செய்யப் போகிறதாக என்னை வரும்படி நிருபம் அனுப்பியிருக்கிருர். அந்த யாகத்திற்கு நான் போக வேண்டும். ஆகையால் என் தேவியாகிய சுந்தரவல்லியை வரச் செய்யுங்கள் மந்திரிமார்களே.

மந்திரிகள் சொல் வசனம்

அப்படியே அழைத்து வருகிருேமையா சுவாமி.

சுந்தரவல்லி வருகிற கவி

மன்னவர்மனங்களிக்க மாதருமதிசயிக்க
உன்னதசரிகைசேலை ஒளிபெரும்வாடைவீச

அன்னம்போல்நடைநடந்து அழகுதாதியர்கள்சூழ
துன்னியபணிகளாட சுந்தரவல்லிவருகின்றாளே.

### சுந்தரவல்லி வருகிற தரு

சோதிமதிவதன ஆதிலக்ஷிமியைப்போல்
சுந்தரவல்லிவந்தாள் வெகுவடிவினிலழகிய சுந்
பூதலந்தனிலுள்ள மாதரதிசயிக்க சுரு
போஜராஜர்கள் வந்தெதிர்காண
மாசிலாவதி யாளுமேகாண சோதி

சந்திரப்பிறையுஞ்சுட்டி விந்தைப்பணிகள்மின்ன
தாதியராலமேந்தவே வெகுவிசித்திரமாக தாதி
கந்தம்பரிமளிக்க சிந்தைமிகக்களிக்க சுரு
கானக்குயிலோ மயிலோவென
வானத்திடையோ கதிரோவென சோதி

செங்கரந்தனிலேயுள்ள கங்கணங்களுமின்ன
திகழும்பணிகளாடவே மணிபதித்த திக
மங்களமாகவே அங்கமதுபூரித்து சுரு
மாந்துளிர்வடி வஞ்சியராட
கூந்தல்வண்டினம் கீதமும்பாட சோதி

தண்டைகொலுசுபீலி தாவடமாலையாட
தையலர்புடைசூழவே மதிவதன தை
அண்டர் நாயகரென்னை அழைத்தவிதமறிய சுரு
ஆவலாகவே மஞ்சமும்நாடி
பாவையர்களும் வந்தெதிர்கூடி சோதி

### சிசுபாலனுக்கும் சுந்தரவல்லிக்கும் தர்க்கத் தரு

சுந் நாதனேவுந்தனிட பாதமதைதுதிசெய்து
நளினமுடனேமலர் சாற்றினேன்
களபமணிந்தமார்பா போற்றினேன்

சிசு நங்கையே எந்தனிட மங்கையே யென்னுளும்
நளினசிங்காரமுடன் வாழ்குவாய்
களபக்குழலமுதே வாழ்குவாய்

சுந் பாரினில்புஜபல தீரனே உத்தனிட
பாதமதற்குமலர் சாற்றினேன்
நாதாவுன்னடியிணை போற்றினேன்

சிசு பூதலந்தனிலுள்ளமாதர்கள் புகழ்கின்ற
பூவையழகில்மிக்க ஆவியே
மேவியென்னுடன்வாழ்வாய் தேவியே

சுந் எத்திசையும்புகழ் சத்துருவெல்லாம்பணியும்
இனியபொற்பாதமலர் சாற்றினேன்
கனகாபிஷேகதீரா போற்றினேன்

சிசு அஞ்சுகம்போலவே ரஞ்சிதமொழியுள்ள
அழகில்மிகுந்தயெந்தன் ஆவியே
செழித்துவுலகில்வாழ்வாய் மேவியே

சுந் அண்டிவந்தவரவர் நின்றடிதாழ்ந்திட
அடியிணை தொழுதேநான் பாதனே
நெடியயுனைத்தொழுவேன் நாதனே

சிசு ஆலகாலம்போன்ற நீலவிழியுடைய
அரவிந்த முகமெந்த ஞவியே
பெருமையுடனேவாழ்வாய் மேவியே

சிசுபாலன் சொல் கொச்சகம்

அன்னநடையின்னெளியே அழகுசுந்தரவல்லியரே
உன்னையழைத்தவிதம் உறைத்திடுவேனெழுந்திருப்பாய்

சுந்தரவல்லி கொச்சகம்

மன்னுமனமகிழ்ந்து மண்டலத்தோர்தானறிய
என்னையழைத்தவிதம் இயம்பிடுவீர்தான்போற்றி

சிசுபாலன் சொல் வசனம்

வாரும் பெண்ணே பிராணநாயகி நீ வந்ததேயாமாகில் மகராஜியாக சுகப்பெற்று வாழக்கடவது, எழுந்திரும் பெண்ணே பிராணநாயகி.

சுந்திரவல்லி வசனம்

சருணம் சருணம் பிராணநாயகா! தேவரீர் மனது சந்தோஷத்துடன் என்னை ராஜசமுகம் வரவழைத்த விருத்தாந்தங்களை இன்னதென்று திருவுள்ளம் பற்றி யருள வேண்டும் பிராணேசா.

சிசுபாலன் சொல் வசனம்

ஆனால், தெரியச் சொல்லுகிறேன் கேளும் பெண்ணே பிராணநாயகி.

சிசுபாலன் சொல் விருத்தம்

அன்னநடைமின்னொளியே மானேதேனே
அழகுசுந்திரவல்லியரே சொல்லக்கேளாய்
தன்னகரில்தருமரவர் யாகஞ்செய்ய
தானிருபம்அனுப்பியதோர் விதமறிந்தேன்
வர்ணமுள்ளமாதரசே போகவேண்டும்
மகிழ்ந்துவிடைகேட்டிடவே வரவழைத்தேன்
நன்மையுடன்நீயெனக்குத் தடைசொல்லாமல்
நலமுடனேபோகவிடை தருகுவாயே.

சிசுபாலன் சொல் வசனம்

கேளும் பெண்கள் நாயகமே! உன்னை அழைப்பித்த விபரம் என்னவென்றால், இந்திரப்பிரஸ்தம் அரசாக்ஷி செய்து வரா நின்ற தருமராஜனவர் ராஜசூயயாகம் செய்கிறபடியினால் என்னை வரும்படியாக நிருபம் அனுப்பியிருக்கிறார். அந்த யாகத்திற்கு நான் செல்ல வேண்டும் நீ தடை சொல்லாமல் நல்ல மனதுடனே விடை தந்தனுப்பும் பெண்ணே பிராணநாயகி.

சுந்திரவல்லி சொல் தரு

அய்யோயிது தெய்வம்சதி அறியேன் யேதுந்தெரியேன்
வையமளந்திடும் மாயனால் வந்தேவிடும் துயரம்
சுரு மார்க்கமோயிது உமக்கேற்குமோ நில்லும்
மாரனே மதியோ நீபோரதும் விதியோ அய்

சிசுபாலன் சொல் தரு

மாதேமாயன்வார்த்தைதன்னை மகிழ்ந்துபேசவேண்டாம்
ஏதுமென்னைஜெயிக்கவீரம் எடுப்பேன்கணை தொடுப்பேன்

சுரு இங்கிர்தக்குயிலே மங்கையேமயிலே
இனிசொல்லலாமோ என்னைவெல்லப்போமோ மா

சுந்திரவல்லி சொல் தரு

செந்தாமரைக் கண்ணன்தன்னே டெதிர்க்கமனம் பதைக்க
வந்தேவிடும்துன்பமென்று வையமறியாதோ
சுரு வஞ்சகமல்லவே சஞ்சலம் வேண்டாம்
மிஞ்சியே போலதால் அஞ்சுதேமனது செந்

சிசுபாலன் சொல் தரு

சீசீபூச்சி காட்டவந்தாய் தீரமேயெனக்கவன் பாரமோ
பேச்சுமூச்சி யறியாயோடி பெண்ணே ஆசைக்கண்ணே
சுரு பேதமையென்பதும் மாதர்களாகும்
பெண்டுக ளுறைக்கவும் முண்டமோர்யிருக்க சீசீ

சுந்திரவல்லி சொல் கவி

எந்தனையழைத்தநீரும் இந்தநல்மொழியுறைத்தீர்
சிந்தைசேர்கிருஷ்ணர்தானும் சீருடன்யாகத்திற்கு
வந்துமேயிருப்பாரங்கு வளர்ந்திடும்வேள்விதன்னில்
சிந்தைநொந்துருகலானேன் செப்பினேன்ஒப்பிடீரே.

சுந்திரவல்லி சொல் வசனம்

கேளும் பிராணநாயகா! என்னை அழைத்து சொல்லிய வார்த்தையைக் கேட்டு என் மனம் உருகலானேன். உமக்குச் சத்துருவாகிய ஸ்ரீ கிருஷ்ணதேவரும் அந்த யாகத்திற்கு வந்திருப்பார். அவருக்கும் உமக்கும் நெடுநாளாய விரோதம் ஏற்பட்டிருக்கின்ற படியினுல் தாங்கள் அவ்விடம் சென்ருல் விரோதம் நேரிடும். அவரை ஜெயிக்க உம்மாலாகாது. ஆதலால், அவ்விடம் போக வேண்டாம் எனது பிராணவல்லபா.

சிசுபாலன் சொல் தரு

எனக்குசத்துருவாகவே ஜெனித்தவன்றன்
பதைக்க உயிரைப் போக்கவே

சுரு சேதியறிந்திட வாய்மிகநாடி
தீதில்லாமலே நான்மிகத்தேடி என

### சுந்திரவல்லி சொல் தரு

உனக்குசத்துருவாகுமோ இவ்வுலகினில்
ஜெனித்துவந்திடப் போதுமோ
தனக்குநிகரில்லாமல் உனக்குவேறே பொல்லாதோ

சுரு சத்துருவானவர் இத்தலமுண்டோ
வெற்றிகள்செய்திடக் குற்றமுண்டாமோ உன்

### சிசுபாலன் சொல் தரு

நானேயுறைத்தமொழியால் எனக்குச்சத்ரு
காணப்படுவ தழிவால்
தோன்றுமுன்னேயெதிர்த்து கோணல்தனையறுத்து

சுரு தோன்றியசத்துரு வானவனொழிய
நீண்டிடும்உலகினில் கீர்த்திகளழிய நானே

### சுந்திரவல்லி சொல் தரு

வேணப்புகழ்படைத்தவர் உலகந்தன்னில்
தோணயுனைப் படைத்தவர்
நானேயுரைத்தமொழி வீணுயுறைத்தேனென்று

சுரு வல்லவரவரிட நல்வினையறிய
சொல்லினேனுண்மையை வல்லிநான்தெரிய வே

### சிசுபாலன் சொல் விருத்தம்

செங்கமல முகம்போன்ற தேவிகேளாய்
தெரியாதோ வுந்தனுக்கு பழையசேதி
மங்கையந்த ருக்மணியை எனக்கென்றெண்ணி
மனமகிழ்ந்து பரியமதை ஈந்திருக்க
பொங்கமுடன் துவாரகையி விருந்துவந்து
பிரியமதாய்ரதமேற்றிப் போனனப்போ
திங்கள்முகவடிவான தேவிகேளாய்
சேயிழையே யிச்சேதி அறிகுவாயே.

### சிசுபாலன் சொல் வசனம்

கேளும் பெண்ணே பிராணநாயகி! முன்னால் எனக்கென்று நியமித்திருந்த ருக்குமணியை நான் பரியமிட்டிருப்பதை கிருஷ்ணனறிந்து சூதுமார்க்கமாக ருக்மணியை ரதத்தி லேற்றிக்கொண்டு போன கள்ளனை, நான் எந்த வேளையில் வந்து எதிர்ப்பானோ வென்று எதிர்ப் பார்த்திருந்தேன். இப்போது அவன் என்னுடன் எதிர்ப்பானாகில் அந்த கிருஷ்ணன் பேரில் உயுத்தியம் செய்து ஒரு கை பார்த்து வருகிறேன் சந்தோஷமாக விடைகொடுத் தனுப்பும் பெண்ணே பிராணநாயகி.

### சுந்திரவல்லி தரு

வல்லமை இனிமேலென்ன செல்லுமோசெல்லாதுகாலம்
வந்துதேயிடர் தந்துதே
சொல்லுமொழிதள்ளிப்போக அல்லல்வந்துவுந்தனையும்
சூழுமேயெல்லாந் தாளுமே சுரு

சுந்திரதீரனே தந்திடுமாமொழி
வந்திடும்போதல்லோ சிந்தையிலெண்ணும் வல்ல

### சிசுபாலன் சொல் தரு

எண்ணமற்று யென்முன்வந்து குண்ணிநீ தவித்துவாடி
ஏசுருய்மிக வீசுருய்
விண்ணவர் அயன்மால்தேவர் வெற்றிக்கொள்வே
னென்ருலும்
வெட்டுவேன் கட்டி நெட்டுவேன் சுரு

கிட்டியேவந்துநீ அட்டியில்லாமலே
மட்டில்லா வார்த்தைகள் கொட்டிடலாமோ எண்

### சுந்திரவல்லி தரு

சங்கையாகு திந்தசொல்லால் பங்கமாகி நீ மடிய
சாரமோயென்ன நேரமோ
மங்கையென் மொழிதடுக்க எங்கேயாகிலு முண்டோ
பத்தியோயிது புத்தியோ சுரு

காவலர் சூழவும் போவது நன்மையோ

### சிசுபாலன் தரு

சற்றும்பயமற்று யென்முன் புத்திமிகச் சொல்லவந்தாய்
சாற்றுருய் கோபம் யேத்துராய்
பத்திருபிளவாய் வெட்டி வைத்தகோபம் ஆருவண்டி
பாரடிவீடு சேரடி சுரு

பஞ்சையைப் போலவே கெஞ்சி வணங்கியே
வஞ்சியே சொல்வது ரஞ்சிதமாமோ சற்

### சுந்திரவல்லி கவி

மனக்குறையதனைத்தீர்க்கும் மாயனுரிடமேசென்று [தேன்
சினக்கவேபடையைக்கூட்டி சொல்லொணுதென்றுரைத்
தனக்குள்ளேதான்மகிழ்ந்து தையலின் வார்த்தைதள்ள
உனக்குமேபங்கம்நேரும் உத்தமாயேகொண்ணுதே.

### சுந்தரவல்லி வசனம்

கேளும் பிராணேசா இந்த பூமியின்கண்ணில் மனதில் கவலை யுள்ளவர்களுடைய இடுக்கன்களை தீர்த்து கார்த்து ரக்ஷிக்கும் ஸ்ரீ கிருஷ்ணர்பேரில் கோபங்கொண்டு படை யெடுத்துப் போவது நன்மையல்ல என்னுடைய வார்த்தை யைத் தள்ளி யாகத்துக்குச் சென்ருல் அபஜெயம் நேரிடும் போக வேண்டாம் எனது பிராணநாயகா.

### சிசுபாலன் சொல் தரு

மடிக்கச்சத்துருவான கிருஷ்ணனையும் எனதுவாளிஞல்
நொடிக்குள்ளே பொடியாக்கி எரிந்திடுவேன் சுரு

நொடியிலவனிட முடிகள்சிதறிட
கொடியவிருதுகள் பிடித்துமுடித்திட
கடுகிமாயனை நொடியில்மடித்திட
நெடியகொடிமுடி கிடுகிடென்றிட மடி

### சுந்திரவல்லி தரு

துடிக்கயேகுவே னென்றுசொல்குறீர் என்பிராணநாதா
சடுக்கிலென்மனம் வாடச்செய்குறீர் சுரு

தனக்கிடுக்கம்செய்திடும் துடுக்கர்தன்னையே
கடுகிஅவனுயிர் மடிக்கநேருமே
துடுக்காய்நீயுமே விடுக்கும் சேனைகள்
சடுக்கிலுன்சிரம் கடுகிமடிப்பரே துடி

சிசுபாலன் தரு

ஏதடியுனக்கிந்த யோசனைகள் சத்துருவென்று
போதிலவன்சிரசை வீசிடுவேன் சுரு
வாதுபேசவும் மாதேசரியல்ல
ஏதுவுன்னிட பேதைகுணமிது
தீதுசெய்திடுங் காதகனுடன்
வாதுசெய்திட போகும்போதுநீ

சுந்தரவல்லி சொல் தரு

பேதையென்றனை தூஷணித்திடவே நானேது செய்குவேன்
ஏதுகாரணம் நானறிகிலேனே என்பிராணநாதா சுரு
மாதுசொல்வதை தீதென்றெண்ணியே
ஏதுதாடகை காதகியென
சூதுசெய்திடும் பாதகினுனே
பேதம்வைத்துமே நீதியற்றிட பேதை

சிசுபாலன் சொல் கந்தார்த்தம்

அன்னமேயென்மொழியைத் தடுத்திடும்அஞ்சுகமே
வன்னிசிரோன்மணிஉன்னை என்வாளினுல்வாட்டிடுவேன்
கன்னியேநீயுமேநமன்பதி சேர்ந்திடகாதகியே
பின்னையேயுந்தனை வன்னிக்கணையினுல்.

சிசுபாலன் சொல் தரு

வாட்டுவேன் எதிர்த்தபேர்களை ஆட்டுவேன்
வாட்டியேயுந்தனை நாட்டுவேன் யென்கொடி
மேட்டிமையாகவே போட்டிசெய்யாதே வாட்

சுந்திரவல்லி சொல் கந்தார்த்தம்

அரிவாசுதேவருடன் எதிர்ப்பேனென்று
அச்சமற்றுஉச்சிதங்கள் பேசவேண்டாம்

திரமானராவணனுங் கும்பகர்ணன்
திசைபுகழும்சதகண்டன் இரண்யாசூரன்
தரணிதன்னைஓரடியா யளந்தவாயன்
சக்ரவர்த்திபாணனையும் கஞ்சன்தன்னை
சிரந்துணித்தமாயனையும் எதிர்த்துவெல்ல.

சுந்திரவல்லி தரு

தீரமாய் படையுடனே போவதுசூரமோ சுரு
வீரமாய்ப்படையுடன் தீரமாய்போவதால்
சூரனேகணையினால் ஜீரணமாகுவாய் தீர

சிசுபாலன் கந்தார்த்தம்

ஜீரணமாவேனென்ற சேயிழையாளேகேளாய்
தாரணிதன்னிலென்னை தடுப்பவருலகிலுண்டோ
நேரதாய்சென்றுநானும் நிகரிலாபாணம்பூட்டி
பாரடி காணயேகி.

சிசுபாலன் தரு

பதைக்கவேவதைத்திடுவேன் எதிர்பேசியே நின்றால்
சிதைக்கவேவதைத் திடுவேன் சுரு
பதைக்கநானுமே எதிர்த்தபேர்களை
வதைத்து வருகிறேன் மதத்துபேசுராய் பதைக்

சுந்திரவல்லி கந்தார்த்தம்

இப்படிசொல்வதுதப்பிதநேருமென் றெண்ணிடுவாய்
செப்பியமாயனால்எப்படிமுடியுமோ சேயிழையாள்
எப்படிபூமியில்ஒப்பியிருந்துநான் ஏங்கிடுவேன்
கப்பியவாடைகளில்லா திருந்திட.

சுந்திரவல்லி தரு

காணுமேநீர்யேகிட உண்மைதோணுமே சுரு
காணவும்உம்மிட நாணயமாகவே
வேணதுசொல்லினும் தோணுமோயிங்கே காணு

சிசுபாலன் சொல் கவி

பேதமையகற்றுமென்று பேசியபெரியோர்வார்த்தை
ஆதியாய்தெரிந்திருந்தும் ஆரணங்கெளிதாய்சொன்னுய்
நீதிமன்னவர்களோடு நெடியதோர்யாகத்திற்கு
பாதகிநானும்போவேன் பாவையேமனைக்குச்செல்வாய்.

சிசுபாலன் சொல் வசனம்

கேளும் பெண்ணே பிராணநாயகி! பேதை யென்பது மாதர்க்கணிகலமென்று முன்னேர்கள் சொல்லிய பழமொழி என்னும் வார்த்தையைக் கேட்டதில்லையோ நீ யென்ன நெடுநேரமாக என் முன்னின்று வாது செய்கிருய் உன் வார்த்தையை நான் கேட்பதில்லை. என் மந்திரி முதலான படைத்தலைவரைக் கூட்டிக்கொண்டு தர்மராஜனுடைய ராஜசூய யாகத்திற்கு போய் வருகிறேன் நீ அரண்மனைக் குப் போய் சேரும் பெண்ணே பிராணநாயகி.

சுந்திரவல்லி கவி

சொன்னசொல்தடுத்துமீறி தூஷித்துயெனை அடுத்து
கன்னியென்வார்த்தைதள்ளி கணவரும்நடந்தாரையோ
என்னமாய்தனித்திருப்பேன் எரியுதேவயறெனக்கு
மன்னவாதரணிதன்னில் மங்கையும்வாடுரேனே.

சுந்திரவல்லி தரு

இந்தகண்காக்ஷிகாண வந்துன்னைமாலையிட்டேன்
இவ்விதிக்கென்னசெய்வேன் மன்னவரே
சுந்திரமானமன்னன் எந்தன்வார்த்தையைதள்ளி
சூரமுடன்நடந்தார் என்னசெய்வேன்
அந்தமுடன்தருமர் அவர்செய்யும்யாகத்திற்கு
அரசரும்யேகினுரே ஓதெய்வமே
விந்தையுடனேமாயன் வந்திருப்பாரேயெங்கள்
விபரீதமென்னஆமோ ஓதெய்வமே
சுந்தரியானமாது சொல்லும்வசனம்தள்ளி
சுருக்குடன்நடந்தகதையோ ஓதெய்வமே
விந்தையுடனவர்க்கு வேணவசனம்சொன்னேன்
வீம்பாகநடந்தாரே ஓதெய்வமே இந்

## பொது வசனம்

இவ்விதமாக சுந்தரவல்லியானவள் துயரத்துடன் புலம்பிக்கொண்டு அரண்மனைச் சேர்ந்தாள். அப்பால் சிசுபாலன் படைகளை கூட்டிக்கொண்டு இராஜசூய யாகத்திற்கு போகும்படியாக இந்திரப்பிரஸ்தம் வருகிற விதங் காண்க.

## சிசுபாலன் இந்திரப்பிரஸ்தம் வருகிற தரு

திறமிக்கவலுபெற்ற அரசர்க்கதிபனை
சிசுபாலராஜன் நடந்தான் வெகுசேனைகளுடனே திற
அரவந்துஜங்களாடவே இவ்வுலகம்கிடுகிடென்ன
தரனிமன்னவர் நாடவே அதிசுந்தரமுள்ள
அரிவையரெதிராடவே ஒளிமிஞ்சியகடல்போல்
முரசுபேரிகைபாடவே எங்கும்நிறைய
நரிபரிசேனைகள் வரிசையுடநடக்க சுரு

காருபாருடன் வீரர்கள்சூழ
பாரியமன்னர்கள் வந்தடிதாழ திரு

முத்துக்குடைகவிக்கவே வெகுவிதசூரர்கள்
வெற்றிவிருதுபிடிக்க எதிர்கண்டிடுமன்னர்கள்
பத்திக்கரங்குவிக்கவே இத்திசையோர்கள்
சித்தங்கலங்கிநடுங்க அண்டமண்டலமஞ்ச
ராகத்தாளம்தமரிகள் துத்தாரியும்முழங்க சுரு

கங்குலகன்றிடும் கதிர்முடிமின்ன
தங்கபூஷணம் மேனியில்துன்ன திற

அண்டரதிசயிக்கவே வரும்சேனைகளெல்லாம்
கண்டுமிகதுதிக்கவே இதையெண்ணியலக்கம்
உண்டோமனங்களிக்கவே அந்தபிர்மனுமெப்படி
நன்ருய்மிகவிதிக்கவே முன்மூலபலங்களும்
கொண்டுருவாகியே கண்டதிதோவென்று சுரு

குறித்திடும்படி குவலயமஞ்ச
பெருத்ததோவென சேனைகள்மிஞ்ச திற

பொன்னும்பணிகளிலங்க ஆகாயமளாவிய
மன்னர்கள்கரங்குவிக்க அந்தஅகண்டமார்பினில்

மின்னும்பூஷணமிலங்க வெகுமிகுத்தபக்தர்கள்
தன்னுள்ளமதுகலங்க மிகுஆயுதசரவண
பொன்னும்சுரிகைபாலா மின்னுமிடைகட்டாரி சுரு
பூண்டவிருதுகள் மின்னுஜொலித்திட
தாண்டியேவெகு மன்னர்களித்திட திற

சிசுபாலன் கவி

சந்திரகுலத்துத் தருமபூபதியே
வந்தனமுந்தன் மலரடிசரணம்.

தருமர் சொல் கவி

சிந்தையுமகிழ்ந்து சீருடன்வாழி
அந்தமாய்சோதி அரசனேவாழி.

பொது கவி

மாதவர்முனிவரெல்லாம் மறையவர்தேசமன்னர்
யாதவகிருஷ்ணமூர்த்தி அருஞ்சபைநடுவிருக்க
வேதவேதியர்கள்யாகம் விதிப்படிநடத்தும்போது
தாதவிழ்மாலைமார்பன் தருமரைநோக்கிச்சொல்வார்.

பொது வசனம்

இவ்விதமாக அனேக தேசத்தரசர்களும் ரிஷிக்கூட்டங்களும் யாகசாலையில் நிறைந்திருக்கக் கண்டு அந்த சபையில் தனிச்சந்திரனைப்போல் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி யானவர் விளங்கி யிருக்க யாகசாலையில் ஓமகுண்டம் வளர்த்தி சுற்றி வந்து பிரதக்ஷணம் செய்து மாருதியும் தின சௌனமென்னும் சொல்லானின்ற இரண்டு சடங்குகளை யும் நிறைவேற்றி யாகம் செய்யும் வேளை வந்தபோது வீஷ்மர் தருமராஜனைப் பார்த்து சொல்லுகிற விதங் காண்க.

வீஷ்மர் சொல் தரு

தருமனேபூபா சுத்தயாகம்
சடங்குகள் தீபா
பெருமையாய்சபையோரை பூசைசெய்யவேண்டும்
அருமையாகமுந்தியிந்த அன்பாய்சடங்குசெய்யும் தரு

தருமர் சொல் தரு

குருகுலபிதா எங்களுக்கெல்லாம்
குறைவில்லை தாதா
தருவும்கற்பகம்போலே தழைத்தசபையில்முத்தி
ஒருவரைபூஜிக்க உகந்தருள்புரிகுவாய் குரு

### வீஷ்மர் சொல் தரு

இஷ்டகெம்பீரா தெரிந்தமட்டும்
இயம்புவேன் பாராய்
நக்ஷத்ரகிரணத்துள் நளினசந்திரன்போல
பக்ஷமாகஜெக ரக்ஷகர்யிருக்கிறுர் இஷ்

### தருமர் சொல் தரு

சந்தனன்மைந்தர் ஒருமொழி
சம்பிரமாய் தந்தாய்
இந்தசபையோரெல்லாம் ஏற்றுக்கொள்ளும்படிக்கு
வந்தனம்விபரமாய் வகுத்துச்சொல்வீரையா சந்

### வீஷ்மர் சொல் வசனம்

கேளும் தருமராஜனே! இந்த சபையிலிரானின்ற யாவருக்கும் அனேகங் கோடி நக்ஷத்திரங்களுக்கும் நடுவில் தனிச் சந்திரனைப் போலவும் பல சவுரியம் சாமார்த்தியம் புத்தி தைரியம் தேசகம்பீரர் தன்மை தயவு பொறுமை யாரிடத்தில் விளங்கி யிருக்கின்றதோ யாரால் இந்த யாகம் நிறைவேறி வருகிறதென்ருல்—அந்த கிருஷ்ணபகவானே யன்றி வேருெருவரையும் பூசிக்கத் தகாது. ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை முதலில் பூசை செய்து தாம்பூலம் வழங்கும் தருமராஜனே.

### தருமர் சொல் தரு

பூஜைசெய்வேனிந்த புண்ணியர்கண்ணன்பாதம்
வாசனை தீர்த்தங்கொண்டு மலரடிதுலங்கியே துடி
கந்தபுஷ்பங்கொண்டு கமலத்திருவடியில்
சந்தனபரிமளம் தரித்துயாகமீடேற பூ
சொர்ணமலாசூடி தொழுதுபாதம்வணங்கி
வர்ணத்திருவடியை வணங்கிவிழியிலொத்தி பூ
எக்காலம்துணையென்று ஏத்திதோத்திரம்செய்து
முக்காலும்வலம்வந்து மூலாதாரப்பொருளே பூ

### பொது வசனம்

இவ்விதமாக தருமராஜர் கிருஷ்ணமூர்த்தியை பூசை செய்யும்போது யாவரும் சந்தோஷமாக விருக்க அந்த சபையிலிருந்த சிசுபாலன் அரசர்கள் யாவற்ருளு மிருக்க நம்மை மதியாமல் யாதவ கிருஷ்ணமூர்த்தியை முதலில்

பூசை செய்தானென்று கோபங் கொண்டு இராஜாக்களைப் பார்த்து சிசுபாலன் சொல்லுகிற விதங் காண்க.

சிசுபாலன் சொல் கவி

தேசமன்னவர்களெல்லாம் திறமுடன்வந்திருக்க
பாசமாய்தருமராஜன் பாங்குடன்மதிப்பில்லாமல்
வாசமாய்கிருஷ்ணதேவன் மலரடிபூசைசெய்தான்
நேசமாயிவ்விடம்விட்டு நிமிஷத்திலேகுவோமே.

சிசுபாலன் சொல் தரு

இந்தசபையிலுள்ள விந்தைமன்னவர்களே
இதுவென்ன நலந்தானே சொல்லும்சொல்லுங்கள் இந்த
வந்தஅரசர்கூடி மகிழ்ச்சியுடனிருக்க சுரு
வடிவுள்ளமன்னவரை விட்டுமேநீங்கி
இடையனுக்குப்பூசை எப்படிசெய்யலாம் இந்த
தகப்பனிருக்கவேறே தாயொருவனைச்சேர்ந்து
தந்ததருமனுச்சுதே இவன்குலமறியாதோ தந்
சுகப்படும்ஐவருக்கு துரோபதைதாரமொன்று சுரு
சுத்தமிப்படி யாகையினாலே
புத்தியிப்படி வந்ததனாலே இந்த
சாபத்தால்வந்தகெங்கை தனயரைக்கொன்றபாவி
தன்மகனிவனுகுமே இவன்குலமறியாதோ தன்
ஆபத்துப்பட அம்பை அவள்வாழ்வைகெடுத்தானே சுரு
அருமையானகுரு வார்த்தையைத்தள்ளி
பெருமையாகசமர் செய்தானேதுள்ளி இந்த
யாதவனந்தகோபன் அவனுக்காளாகியே
ஆடுமாடுகள்மேய்த்தவன் பால்தயிர்திருடி
ஏதிவன்வண்மையே எவ்வளவுமறியாமல் சுரு
ஏற்றுக்கொள்வது பூசையெப்படி
பார்த்துகொள்ளுங்கள் வண்மையோயிப்படி யாத

சிசுபாலன் சொல் கவி

ஜாதிக்குத்தகுந்தபுத்தி சரிசரிவிளங்கக்கண்டேன்
நீதிக்குத்தகுந்தமன்னர் நெடிமுடிகுனிந்துவாட
சோதிக்கயிடையனுக்கு துலங்கவேபூசைசெய்தான்
ஏதுக்குயிருக்கவேண்டும் எழுந்திருந்தேகுவோமே.

சிசுபாலன் சொல் வசனம்

கேளுங்கள் இந்த சபையிலுள்ள ராஜாதிபதிகளே! ஜாதிக்குத் தகுந்த புத்தி குலத்திற்கேற்ற வண்மை யென்பதற்கு சரியாகவே தருமராஜன் முதலில் இடையனைப் பூசித்து நம்மை யெல்லாம் இந்த அபிமானம் செய்தான். இனிமேல் நாம் ஏதுக்காக இவ்விடத்தில் இருக்க வேண்டும் அவாளவாள் பட்டணம் போய் சேருவோம் வாருங்கள் ராஜர்களே.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

இப்படிகோபிக்கலாமோ ...... சிசுபாலாதம்பி
இப்படிகோபிக்கலாமோ
அப்பாபீஷ்மாச்சாரியும் செப்பும்மொழியைக்கொண்டு
இப்புவிமன்னவரெல்லாம் ஒப்பியேயிருக்கக்கண்டு இப்
யோகசுந்திராநீயும் நோகவையாதேஎன்னை
யாகந்தனைமுடித்து போகலாம்பூரிப்பாக இப்
சந்தனன்மைந்தன்தன்னை நிந்தனைசொன்னவரில்லை
இந்தசபையில்மனம் நொந்துவாடச்செய்யாதே இப்
நல்லோர்க்குநீபழுது சொல்லாதும்சொல்லவேண்டாம்
நில்லாதுஇந்தவீரம் எல்லாமறிந்தமன்னு இப்

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தியானவர் சிசுபாலனுக்கு நன்மார்க்கமான தத்துவங்களை உபதேசிக்கும்போது அதை ஏற்றுக் கொள்ளாமல் சிசுபாலன் அதிக கோபத்தோடு இருக்க அதைப் பார்த்திருந்த வீஷ்மாச்சாரியானவர் சிசுபாலனைப் பார்த்து சொல்லுகிற விதங் காண்க.

வீஷ்மர் சொல் தரு

தட்டிவிடுவான்சொல்லை தருதலைதனக்கென்றும்
கெட்டநடக்கைதன்னை விட்டிடப்போகாதே

சிசுபாலன் சொல் தரு

போகாதேயென்றுசொல்லி பொங்காதேகிழவாநீ
ஆகாதவிதஞ்சொன்னீர் அறிந்தவர்போலவே

வீஷ்மர் சொல் தரு

அறிந்தருக்மணிக்காக அவர்கையாலடிப்பட்டதை
மறந்துவிட்டாயோயிந்த வலுமைக்கூற அறி

சிசுபாலன் சொல் தரு

வல்லமையறியேனே வயதுசென்றதினாலே
நல்லறிவில்லாமன்னே நடயெட்டி நடவும் வல்

வீஷ்மர் சொல் கவி

நடவுமென்றுரைத்தயென்னை நாதனேயுலகுக்கெல்லாம்
விடவேறேகர்த்தனுண்டோ விண்ணுமண்ணளந்தபாதன்
தடைமலைக்குடைபிடித்த தற்பராபரனைவைது
துடர்வினையிதுதானப்பா சொல்லுவேன் அறிகுவீரே,

வீஷ்மர் சொல் வசனம்

கேளும் தருமராஜனே ! என்னை நடவுமென்று சொல்லிய இந்த சிசுபாலன் தன்னை பெருமையாகப் புகழ்ந்து கொள்ளுகிறனே, இந்த கிருஷ்ணமூர்த்தியை யாரென்றிருக்கிறீர். இவர் சோமுகன் இரணியன் இரணியாக்ஷதன் பலிச்சக்ரவர்த்தி கார்த்திகைவீரன் ராவணன் முதலானவரை சங்கரித்து தேவர்களுக்கு சுகவாழ் வளித்தவர் இவரோ முற்றெழிலுக்கும் காரணவஸ்து வானவர் இவர் பெருமையை எடுத்துரைக்க ஆதிசேஷனாலு முடியாது அதை யறியாமலிந்த சிசுபாலன் அவரை இகழ்ந்து பேசுகிற படியால் இவன் படப்போகிற கதியை இன்னம் சற்று நேரத்திற்குள் பாரும் தர்மராஜனே.

பொது கவி

மனதினில்யறியுமென்று மகிழ்ச்சியாய்பீஷ்மர்கூற
கனலதுயெழும்பமேனி கண்களிற்பொறிபறக்க
தணலிடிபோல்கர்ச்சித்து தடைபடாசிங்கம்போல
இனமுள்ளமாயன்தன்னை எதிர்த்துமேயுரைசெய்வானே.

பொது வசனம்

இப்படி வீஷ்மாச்சாரியார் கூற சிசுபாலனுக்கு கோபம் பிரவேசித்து கிருஷ்ணமூர்த்தியை பார்த்து சொல்லுகிற விதங் காண்க,

## சிசுபாலன் சொல் தரு

எனக்குநீசரியாவையோ சண்டைசெய்யவே
எழுந்துவாடா வாடா
உனக்குநானஞ்சுவேனே உன்வலுவறியேனே
உகந்துக்கொள்ளவேபூசை அகந்தனில்மகிழ்ந்தாயே என
வல்லவீரியங்கெட்டவன் இடைப்பெண்களால்
மத்தாலடி பட்டவன்
நல்லதுவுனக்கிந்த ராஜத்தண்மையேதடா
நடுவில்வீற்றிருக்கிருய் விடுவேனேஇனிசும்மா என
மடுவுக்கேகியேமெள்ளென கோபாலப்பெண்கள்
புடவைத்திருடுங் கள்ளனே
படும்விதியாலேவந்து பறக்காதேயினிசும்மா
பாணத்தினுலெந்தன் வீரங்காணச்செய்வேன் என
இன்னம்தாமிஷமேது வலுவிருந்தால்
எதிர்த்துவாரு மிப்போது
பன்னும்தருமர்வீஷ்மர் படைகூட்டிவந்தாலென்ன
பம்பரம்போல்சுழட்டி அம்புக்கிறைகொடுப்பேன் என

### கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

தாருகனேநீவாடா இவனைஇப்போ
தண்டிக்கமனதானேன் தருணவேளை
வாருஞ்சைன்னிய சுக்ரீபமேகபுஷ்ப
வலாகமென்னும் புரவிதன்னைரதத்தில்பூட்டி
கூறுமந்தக்கருடதுசந் தன்னையேற்றி
குலுக்கிடவேசிலையிட்டு அலங்கரித்து
மேருகிரிபோல்விளங்கும் ரதத்தையிங்கே
வெகுதுருசாய்க்கொண்டுவந்தாய் நிறுத்துவாயே.

### கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அகோ வாருமப்பா தாருகனே! இந்தக் கொடிய துஷ்டனுகிய சிசுபாலனை இதுநேரம் தெண்டிக்க மனதானேன், இப்பவும் சைன்ய சுக்ரீப மேகபுஷ்பவலாகமென்றும் சொல்லாநின்ற நான்குபுரவிகளையும் ரதத்திற் பூட்டி கெருடத் துஜமேற்றி அலங்கரித்து நம்மிட ரதத்தை சல்தியாக கொண்டு வந்து நிறுத்தும் தாருகனே.

## பொது வசனம்

இவ்விதமாக கிருஷ்ணமூர்த்தி சொன்ன க்ஷணநேரத்திற்குள் தாருகன் சென்று இரதத்தை சிங்காரித்து புரவிகளைப்பூட்டி இரதத்தைக் கொண்டு வந்து நிறுத்த கிருஷ்ணமூர்த்தி இரதமேறிக்கொண்டு சொல்லுகிற விதங் காண்க.

## கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

தாருகன்ரதமதைமுடுக்க சாரங்க
தனுவாளிமாயனு மெடுக்க
கைகூப்பியெல்லவரும்நேரா அப்போ
கடுகியேமாயனும்ரதமீதி லேற
சல்லரிமணிமுரசுகொட்ட நல்ல
சாரதிமுடுக்காகபுரவிகளை தட்ட
வந்தாரேயிருவருமாய்க்கூடி அந்த
வல்லமைகொண்டாடரணகளத்தை நாடி
சிசுபாலன்வர்மமதைமுடிக்க தேவனும்
கைதனிலேஅஸ்திரசக்கர மெடுக்க
யாவரும்கண்டுமேயஞ்ச கிருஷ்ண
தேவரும்அதிகமாய்கோபமே மிஞ்ச
மாயவன்வருவதைக்கண்டு மன்னவன்
சிசுபாலன்மனதிலேசினமது கொண்டு
நெஞ்சமும்துடிதுடிக்கமீறி நீவ
ர்ணனைப்பார்த்துமேவருவதைப் பாரீர்
கர்த்தனும்சமர்செய்யவேண்டி அப்போ
களிப்பாகமாயவரும்பகவானைத் தூண்டி
உக்ரமுடனவனையும்கோரி ஒரு
க்ஷணத்தினில்கொல்லவேநானவனையும் நாடி தாரு

## சிசுபாலன் சொல் கவி

முன்னாளெதிர்த்தகிருஷ்ணாநீ முக்கியமானசத்ரு
உன்னைநான்சங்கரித்து உதிட்டிரன்வீஷ்மாச்சாரி
தன்னையும்கொன்றுயிந்த தாரணியாளவேண்டி
என்னுள்ளம்நினைந்துவந்தேன் ஈடேறும்காலந்தானே.

சிசுபாலன் சொல் வசனம்

கேளும் யாதவகிருஷ்ணு! நீ ஒருவனே எனக்கு முக்கியமான சத்துருவாக இருக்கிறுய் உன்னை மதித்து தர்மர் வீஷ்மர் முதலானவரையும் கொன்று உலகத்தரசரை கைவசப்படுத்திக் கொண்டு நானே இந்த பூமண்டலமெல்லாம் ஆளும்படிக்கு நினைத்திருந்தேன்; அது இன்றுதான் கூடி வந்தது எதிர்த்துவாடா கிருஷ்ணனே.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

சாரங்கத்தனுதன்னைப்பூட்டியே சிசுபாலராஜனே
பாரெங்குமஞ்சப்பாண மீட்டினேன்

சிசுபாலன் சொல் தரு

மீட்டியக்கணைதனைத்தடுத்துமே ஓயாதவகிருஷ்ணு
ஓட்டியக்கணை உருகவாங்கினேன்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வாங்கியசரம்தன்னைதடுத்துமே சிசுபாலராஜனே
தேங்கித்திகைத்தசூரம்பெடுத்தேனே

சிசுபாலன் சொல் தரு

அம்பெடுத்துமேஅண்டம்நடுங்கவே ஓயாதவகிருஷ்ணு
கும்புகும்பலாய்வாங்கிவீசினேன்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வீசியசரம்தன்னைவிலக்கியே சிசுபாலராஜனே
கூசியோடவேகுறுகிஜாடினேன்

சிசுபாலன் சொல் தரு

சாடியசரம்தன்னைமாற்றியே ஓயாதவகிருஷ்ணு
கோடிகோடியாய்சரங்களேவினேன்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

ஏவியக்கணையெங்கும்நிறையவே சிசுபாலராஜனே
மாத்திநொடிக்குள்மடிப்பேன்பாரடா

சிசுபாலன் சொல் தரு

மடிப்பேனென்றுமேமகிழ்ந்துபேசுருய் ஓயாதவகிருஷ்ணு
முடிப்பேன்பகையைமுன்னே நில்லடா

கிருஷ்ணமூர்த்தி சொல் கவி

வெட்டுவேனென்றுகூறி வீரியம்கொண்டுமீறி
கட்டுகட்டாகயேவிக் கடிந்திட அதைதடுத்து
எட்டுயீரெட்டுப்பத்து ஏகமாய்வரவிடுத்தேன்
பட்டுமேமூர்ச்சையாகி பார்மிசைவிழச்செய்தேனே.

கிருஷ்ணமூர்த்தி சொல் வசனம்

அடா வாடா சிசுபாலனே ! நீ இந்நேரம் விட்ட அஸ் திரங்களை அறுத்து ஒன்று பத்து நூறு ஆயிரம் பதினுயிர மாக பாணம் ஏவினேன். அது உன் மார்பில் தாக்கி மூர்ச்சை யாக்கி பூமியில் விழச் செய்தேன் பாரடா சிசுபாலனே!

சிசுபாலன் சொல் தரு

கொண்டலிடியைப்போல கண்டுகர்ஜனங்கொண்டு
குறித்துக்கொண்டேனே உந்தன்வீரியம்
எதிர்த்துக்கொண்டேனே
கோடிகோடியாய்பாணம் நாட்டியேவருஷித்தேன்
கோரனே அதிகாரனே ரணசூரனே
எந்தன்வீரியம் பாரடா கொண்

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

விட்டபாணமெல்லாம் தட்டிவிலக்கியே
வீரங்கொண்டேனே உந்தனுடைய
தீரங்கொண்டேனே
வேலைசூழுலகோரும் மிக்கநடுநடுங்க
மிண்டனேபாணம் கொண்டேனே
உன்னைதண்டிப்பேன் பாரடா விட்ட

சிசுபாலன் சொல் தரு

இந்தபாணத்தாலே எமகிரிச்சேர்க்கவே
ஏகவிட்டேனே நீயுமிப்போ

சாகவிட்டேனே

இடியைப்போலவந்து கொடியபாணம்காட
ஏங்கவே நீரித்தேங்கவேகணே
வாங்கியேயிதோ ஓங்கிவிடுத்தேனே இந்த

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

வந்தக்கணையைச்சாடி நொந்துபூமியில்விழ
மன்னவரஞ்ச எழுந்துமே
பின்வர மிஞ்சி
பாரக்கணையினுலே போராடிஜெயித்திட
வந்தேனே பாணந்தந்தேனே
இதோவுந்தனைவெல்லவும் எந்தன்சமர்த்தைப்
பாரும் வந்

சிசுபாலன் சொல் தரு

தேரும்கொடியும்வில்லும் சாரதிம்றையவே
தீட்டினேன்பாராம் அமோகபாணம்
மீட்டினேன் நேராய்
தேரொடுகிளம்பியே மீறியாகாயத்தில்
தேவனேபாணம் ஏவினேன்நானும்
சாவனேபாரும் போவேனேவுனைவிட்டு தேரு

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

சுற்றியேபாணத்தாலே பற்றியருத்துமே
தூண்டினேன்போடா பாணமெல்லாம்
மீண்டினேன் வாடா
துள்ளிதுள்ளிமறையாதே சொல்லடா சுரு
சொல்லடாமுன்னே நில்லடாயென்னைவெல்லடா
உன்னைகொல்லாமல் விடுவேனே சுற்றி

சிசுபாலன் சொல் தரு

கண்ணுக்குத்தோணுமல் விண்ணுக்குளாகிய
கடுகிவிட்டேனே அமோகபாணம்
பெருகவிட்டேனே
காலனைப்போலவே சூலமும்வாங்கியே
காட்டுவேனதை நீட்டுவேனுன்மீது
ஓட்டுவேனுன்னைவாட்டுவேன் நானிப்போ கண்

## கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

இந்திர ஜெயித்தைப்போல வந்தேன்ரதமுடுக்கி
என்னெதிர்வாடா பதுங்காதே
பின்னிட்டுமூடா
இப்பவேவுந்தனை தப்பாமல்கொல்லுவேன்
எட்டினேன் வந்துகிட்டினேன்சரம்
கொட்டினேனுன்னை :விட்டுவிடுவேனோ இத்

## சிசுபாலன் சொல் கந்தார்த்தம்

விடுவேனோவென்றுகண்ணன் வெகுவிதக்கணைதொடுக்
படுவேனுவென்றுமீதி பரபரப்பாகஅஸ்திரம் [க
சுடுகணைஅமோகபாணம் சேராமல்எய்யும்போது
அடிபடும்சரத்தை வாட்டி.

## சிசுபாலன் சொல் தரு

அடிக்குதுபாராய் உந்தனையிப்போ
மடிக்குது நேராய்
எடுக்கும்சரங்கள்கோடி இடையாமடையாவுன்மேல்
துளைபட்டிருக்கக்கண்டு சந்தோஷம்நான்கொண்டேன் அ

## கிருஷ்ணமூர்த்தி சொல் கந்தார்த்தம்

இப்படிசேதிமன்னன் இயம்பிகைதட்டும்போது
செப்பியசத்ருவெல்லாம் சிங்கநாதங்கள்செய்ய
ஒப்பிலாஅன்பரெல்லாம் உயிரதுமெலிந்துவாட
தப்பிதம்நேர்ந்த கண்ணன்.

## கிருஷ்ணமூர்த்தி தரு

சாய்ந்துவிட்டாரே மூர்ச்சையாகி
ஏங்கிவிட் டாரே
மாய்ந்தவர்போலவே வருத்தங்கொண்டிருக்கவே
தோய்ந்தசாரதிகண்டு சுவாமிக்குத்திடம்சொல்ல சாய்

## சாரதி சொல் வசனம்

அகோ கேளுமையா சுவாமி பகவானே! தேவரீர் ராவணாதிகளோடும் இன்னம் அனேக சத்ராதிகளையும் ஜெயமடைந்தீர். அப்பொழுதெல்லாம் தேவரீருக்கு இப்பேர்ப்

பட்ட ஆயாசம் வந்ததில்லையே! இப்போது இவன் கையி ஞல் ஆயாசமடைந்தீரே! உமக்கு இவனொரு பொருட்டோ? இவனை இன்னம் கொல்லாமல் இருக்க வேண்டிய காரண மென்ன சொல்லுமையா சுவாமி பகவானே.

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

தாருகனே இவன்வன்மை சொல்லுவேன்கேளும்
பலசாலிவைகுந்த காவலாளியாகுமே
தூருவாசர்சாபத்தாலே சத்துருவாக
சொற்படிமூன்றுபிறப்பில் இப்புவியிலே
வந்துமேபிறக்கவேண்டி இரண்யனுகிவன்
வல்லமைசெலுத்தினதை சொல்லப்போகுமோ
பிந்திலங்கைராவணனுய் வந்துபிறந்து
பேரும்பெற்றுஎன்கையாலே சீரும்பெற்ருனே
செப்புவேன்ஒருமுகூர்த்த காலமிருப்பான் பின்
சேருவானேசாபம்நீங்கி கூரும்வைகுந்தம்
ஆயுசு இருக்கும்போது எப்படிக்கொல்வேன்
அஞ்சவேண்டாம்தாருகனே சஞ்சலமுண்டோ
வேயிசையும்பாடசிங்க நாதமுழங்க
விட்டுவிடசக்கரத்தை தொட்டேன்பாருமே

கிருஷ்ணமூர்த்தி சொல் தரு

எடுத்தேன்சக்கரம்கையில் தொடுத்தேன்மந்திர தூபம்
அடுத்தேனவனைக்கொல்ல விடுத்தேன்வெகுண்டுமீறி சுரு
விண்டலமண்டலம் கண்டுநடுங்கிட
எண்டிசையும்துதி கொண்டுவணங்கிட எடு

சிசுபாலன் சொல் தரு

கண்டேன்சக்கரம்தன்னை கொண்டேன்அமோகபாணம்
அண்டாமலேவிடுக்க துண்டாடியேவிழுங்க சுரு
சூரருமஞ்சவே கரகரவென்றுமே
சிரசையறுத்துமே தரைதனில்தள்ள கண்

பொது கவி

விட்டசக்கரத்தால்ஜோதி மன்னவன்கெதியடைந்தான்
துஷ்டன்மெய்ஜோதிவந்து துளபமால்பாதம்சேர்ந்து
விட்டதைதேவர்கண்டு வெகுமலர்சொரிந்துவாழ்த்த
எட்டாளுமன்னர்போற்றும் இந்திராபுரிக்குவந்தார்.

### பொது வசனம்

இவ்விதமாக கிருஷ்ணதேவர் தனது கையில் தாங்கிய சக்கரத்தை எடுத்து தூபதீபங்கொடுத்து சிசுபாலன்பேரில் ஏவிவிட சக்கரமானது சிசுபாலனுடைய சிரசை அறுத்துத் தள்ள சாபம் விமோசனமாகி வைகுந்தப் பதவிசேர அப்போது உடலிலிருந்த ஒரு ஜோதியானது பிறந்து பதவானுடைய திருமேனியில் வந்து பொருந்தி தேவர்கள் ஜெய ஜெய வென்று புஷ்பமாரி பொழிந்து தோத்தரிக்க மன்னர் எல்லாம் கேசவ சுவாமியைத் துதித்து ஜெயமங்கள வாத்தியத்துடனே இந்திராபுரி சேர்ந்து யாகம் செய்கிற விதங் காண்க.

### பொது தரு

யாகம்செய்துமுடித்தார் தர்மபூபதி
யாகம்செய்துமுடித்தார்
யாகம்செய்யவந்தார் அந்தணர்மறையோத
யோகேந்திரரான ஒருவரும்எதிரில்லா யாக
மறையோர்முனிவருக்கும் மன்னர்மன்னவருக்கும்
முறைமுறையாகவே முக்கியபாய்பூசைசெய்து யாக
கோதானம்பூதானம் குறைவில்லாதானமும்
மாதாவும்பாடியே வையகந்தழைக்கவே யாக
தந்தைபாண்டுராஜன் சண்டன்சபையைவிட்டு
இந்திரன்சபைக்கேகி இன்பசுகமடைய யாக

### துரியோதனன் சொல் கவி

நயகுணத்தம்பிமாரே நல்லம்மான்ஜகுனிகர்ணு
புஜபலதர்மர்யாகம் புகழ்ச்சியாய்க்கண்டறிந்தோம்
தயவுடன்தருமருக்கு சபையலங்காரம்செய்த [மே.
மயன்செய்தவித்தையெல்லாம் மகிழ்ந்துகண்டறிகுவோ

### துரியோதனன் சொல் வசனம்

அகோ வாருங்களப்பா தம்பிமார்களே! சகுனிமாமா அண்ணு கர்ணமகாராஜனே! மற்றுமுள்ள குருபெரியோர்களே! தர்மபுத்திர மகாராஜன் செய்த யாகத்தைக் கண்டு சந்தோஷம் பெருகினேம். ஆகையால், தர்மராஜனுக்கு மயனென்னும் தேவதச்சன் செய்த சபாமண்டபத்தினுடைய அலங்காரத்தைப் பார்த்து வருவோம் வாருங்கள் தம்பிமார்களே.

துரியோதனன் சொல் தரு

இந்தசபையைப்போலேஎங்குங்கண்டறியேனே தம்பிமாரே
வந்தேன்படிக்கல்லால் மடுவென்றறியாமல் தம்பிமாரே
தரையென்றுகால்வைக்க தண்ணீரில்விழுந்தேனே தம்பிமா
விரைவில்தர்மர்வந்து வேஷ்டியளிக்கப்பெற்றேன் [ரே
தம்பிமாரே
வேறொருவழியாக விளங்குதேகுளமாக தம்பிமாரே
நீரென்றுகால்வைக்க நிலமாகிவாடினேன் தம்பிமாரே
விச்சித்ரகம்பம் விளங்குவதறியாமல் தம்பிமாரே
அச்சமில்லாமலே அவன்போயிடித்திட துரியபூபன்
ஒளிகொண்டஉட்புறம் உண்மையென்றுபோக துரியபூபன்
வெளிகொண்டுவிட்டிட வெட்கிநடந்தானே துரியபூபன்
இடிக்கும்வழியைஜலமென்று அடிவைக்க தெய்வமே
தடுத்துவிழுந்துசகலரும் நகைத்தாரே தெய்வமே
சிங்காரமாகவே தேசந்தனக்குவந்தார் ராஜராஜரும்
கைகொட்டிபாஞ்சாலி கண்டுநகைத்திட தெய்வமே

பொது வசனம்

இவ்விதமாக தர்மராசன் செய்த ராஜசூய யாகத்திற்கு தேசத்தரசர்கள் யாவற்ருலும் வந்திருந்து யாகம் முடிந்த பிறகு அவாளவா ளிருப்பிடம் போய்ச் சேர்ந்தார்கள். இப்பால் துரியோதனன் மாயன் செய்த மண்டபத்தின் வேடிக்கையைப் பார்த்து வரும்போது மயன் செய்த சூதை அறியாமல் மண்டபத்தில் வாசற்படியில் அவனது மகுடம்பட்டு கிரீடத்தில் அணிந்திருந்த ரத்தினங்களெல்லா முதிர்ந்து வெட்கிப் போகும் துரியோதனனை பாஞ்சாலியம்மன் பார்த்து இவர் தகப்பன்தான் அந்தகரென்ருல் இவரும் அந்தகராக யிருக்கிருரென்று நகைக்க அதை தன் மனதில் வைத்துக்கொண்டு துரியோதனன் அஸ்திஞபுரி பட்டணம் வந்து சேர்ந்தான். இப்பால் இந்திரந்பிரஸ்தத்தில் பாண்டவர்கள் ஐந்துபேரும் பாஞ்சாலியம்மனும் சுக ஜீவியாக வாழ்ந்து வருகிருர்கள் என்பதாம். மங்களம்!

சராசந்த நாடகம் முற்றிற்று.

---

திருமகள் அச்சகம், சென்னை-1; 1970.